உ

கடவுள் துணை.

# தனிப்பாடற்றிரட்டு.

இஃது

இராமநாதபுரம் ஸம்ஸ்தானம் ம-ா-ா-ஸ்ரீ

பொன்னுசாமித்தேவரவர்கள்

அனுமதியினால்முன்பதிப்பித்த பற்பல

பிரதிகளைக்கொண்டும்

இன்னுஞ்சிலபாடல்களும் நூதனமாகச்சேர்த்து,

திருவெண்காடு

ஆறுமுகசுவாமிகளால்

பார்வையிடப்பட்டு.

திருவொற்றியூர்,

பரசுராமமுதலியார்

குமாரர்,

தி-கன்னியப்பமுதலியார்

அண்டுபிரதர்-அவர்களால்,

தமது,

பரப்பிரமமுத்திராக்ஷரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

—(0)—

1890.

PAL. RAMASWAMY




உ

கடவுள்துணை.

# புத்தகவிளம்பரம்.

—(0)—

இதனால் சகலமானபேர்களுக்கும் தெரிவிப்பது யாதெனில்சென்னையைச்சார்ந்த சூளைஇருங்குன்றம் இலட்சுமிநாராயணபுரத்தில் தொட்டிக்கலை குமரப்பமுதலியார்வீதியில் ௩௯-வது கதவிலக்கமுள்ளகிருகத்தில்ஸ்தாபித்திராநின்ற பரப்பிரமமுத்திராட்சரசாலையில் இதனடியில் கண்டிருக்கப்பட்ட புத்தகங்களல்லாமல் கற்றுணர்ந்தபெரியோர்களால் பிழையறப்பரிசோதித்து அச்சிடப்பட்ட மிகமேலாகிய உபயோகமுள்ள பலவித் வேதாந்த சித்தாந்தகிரந்தங்களும், வயித்தியக்கிரந்தங்களும்,ஜோசியக்கிரந்தங்களும்,சமஸ்கிருதகிரந்தங்களும்,மகம்மதியார்க்கக்கிரந்தங்களும், இன்னும் அனேகவிதமான தமிழ்ப்புத்தகங்களும், விலைசரசமாய் விற்கப்படுமாகையால் வேண்டியவர்கள் மேற்படிஅச்சுக்கூடத்தலைவராகிய தி-ப-கன்னியப்பமுதலியாரவர்களிடத்தில் பெற்றுக்கொள்ளலாம்.

ஸ்ரீமஹாபாரதவசனம் ௰௮ பர்வம் திக்குகாகிதம்

ஸ்ரீமகாபாரதக்கீர்த்தனை

ஸ்ரீமஹாபாகவதவசனம் ௰௨ ஸ்கந்தம் லெத்தகிராப்படத்துடன்

ஸ்ரீமத் கம்பராமாயண வசனகாவியம் சப்தகாண்டங்களுடனும் திக்குவிஜயமுட்பட

பெரியபுராணம் வசனகாவியச்சுருக்கம்—௬௩-படங்களுடன்கிரயரூபா—௩

பிரம்மோத்தரகாண்டம்

ஸ்ரீவிஷ்ணுபுராணவசனம்

விராடபர்வம் குட்டைசயிசில்அச்சிட்டது

பெரிசு பராங்குசதாசர்கீர்த்தனை

அசாபிக்கதை திக்குகாகிதம்

வீரமாமுனிவர்சதுரகராதி—அனுபந்தத்துடன் — பெரியஎழுத்தில் அச்சிட்டது

வயித்தியசாரசங்கிரகம்

அகஸ்தியர் ஏமதத்துவ மென்னும் பஞ்சகாவியநிகண்டு-அா

தட்சிணாமூர்த்திதிருமந்திரம் ௩௫௱

தன்வந்திரி கலைக்ஞானம்-௫௱

இராமதேவர்வயித்தியகாவியம்-௩

அகஸ்தியர் ஆயுள்வேதம்—௩௨௱

யூகிமுனி பதார்த்தகுண சாரசங்கிரகம்

போகர் சத்தகாண்டம்-௭௧

அகஸ்தியர் பாலவாகடம்

வயித்தியமூலிகை அகராதி

பதார்த்தகுணசிந்தாமணி

நளவீம பாகசாஸ்திரம்

குமாரசாமீயம்

ஜாதகசிந்தாமணி

சினேந்திரமாலை

சசசுல்லன்பியா

இறவுசுல்கூல்படைப்போர்மூலம்

ஐந்துபடைப்போர்

அப்பாசுநாடகம்

சீராபுராணம்

ஸ்ரீ அகஸ்தியர்காவியம்—௰௨௲—அச்சிட்டுக்கொண்டு வருகிறோம்.

ஸ்டாம்பு அனுப்பினாலல்லது பதில்கடிதம் அனுப்பப்படமாட்டாது.

உ

ஸ்ரீலட்சுமீகடாட்சமஸ்து.

# சாத்துகவிகள்.

இஃது,

சென்னைத்துரைத்தனக்கல்விச்சாலையில் தமிழ்த்தலைமைப்புலமை
நடாத்தும் இயற்றமிழாசிரியராகிய
திருத்தணிகை
விசாகப்பெருமாளையரவர்களாலியற்றப்பட்டது

நிலைமண்டில ஆசிரியப்பா.

சீர்மலிபெயர்பெறு திகழ்கடலுடுத்த
பார்தனிலார்தரு பற்பலமொழிகளுள்
பண்ணுறுந்தமிழாம் பாற்கடலதனைச்
சொன்னயப்பொருளைச் சுவைமிகவுணர்ந்து
துங்கமிகுத்திடு சங்கப்புலவர்கள்
வள்ளுவரௌவை வான்காளமேகம்
தெள்ளுபொய்யாமொழி திகழ்கம்பராதியாம்
நாவலரென்னு நன்முகில்பருகி
ஓவறவாங்காங் கொழுக்கியகவியாம்
தண்ணுறுமமுதை மண்ணவர்செவியால்
உண்டுகளிப்பதே யுறுதியென்றோர்ந்து
தென்னாடதனிற் பொன்னாடொக்கும்
நிலமகள்வதனத் திலகிய திலகமாம்
பலர்புகழிராம நாதநற்பதியினில்
இனிதுவீற்றிருந்து மநுநூல்விதிவழிச்
செங்கோனடாத்து சங்கேந்துதிருமால்
இரியலர்மடங்கல் சற்குணமேரு
அறிவையர்க்குருவ மாகியவங்கசன்
மன்னுறுபவிதனை மாற்றுமருந்து
சென்னியின்மதிபுனை சிற்பரனடிதொழூஉம்
சிவஞானதேவன் செய்தவப்பயனே
புவிமிசையுருக்கொடுப் போந்தெனத்தோன்றிய
பொன்னுசாமி யெனும்பூபாலன்
தன்மனமுவந்து தயங்குறவெழுகா
வெழுத்திற்பொறித்தே யீந்திடுகென்ன
அரியதவத்தரும் பெரியோர்களும்வாழ்
பொன்னிசூழ்சென்னிப் புன்னாடதனில்
மன்னுதில்லையம்பூ ரென்னும்பதிவாழ்

வாகுறுசந்திர சேகரனென்னும்
புவிராசர்புகழ் கவிராஜபண்டிதனால்
பழுத்திடும்வருக்கையின் செழித்தகனியினை
வான்கவிகவ்வுபு உமந்திக்கிந்து
தானூடறீர்க்குந் தண்டலையுடுத்த
மணலியம்பதிவாழ் மாண்புறுநல்லோன்
குணநிதிநறுமலர்க் குவளைத்தாரான்
பெரியதம்பியா ருரியபெயரினன்
வழூஉக்களைவித்து வாகுறுமச்சிற்
செழூஉறப்பதித்துக் கிளர்வித்தனனரோ.

இஃது காஞ்சீபுரம்-பச்சையப்பமுதலியாரவர்கள் கல்விச்சாலையில்

தமிழ்த்தலைமைப்புலமை நடாத்திய

வித்வான்-காஞ்சீபுரம்

சபாபதிமுதலியாரவர்களாலியற்றப்பட்டது.

நேரிசை-ஆசிரியப்பா

திங்கள்சேர்செஞ்சடைத் தேவனிமய
மங்கைமணாளன் மதுரைப்பெருமான்
இறையெனமேவி யியற்றமிழாய்ந்த
பொறைமிகுசங்கப் புலவரோயாதி
யாண்டுளபுலவரு மினிதின்முன்னோ
பூண்டுளவளமெலாம் பொற்புடனினிவரும்
நற்றமிழ்வல்லோர் நாமுமதன்வளம்
தெற்றெனவுணர்க்குதுஞ் சிறிதெனத்தத்தம்
நாப்புடைபெயரா வண்ணநலந்திகழ்
கோப்புடைக்கவியாற் கூறியதாகி
அன்னவர்பின்வரு மறிஞர்களதையோர்ந்
தென்னெனப்புகழ்ந்து மித்தமிழ்நாட்டினை
ஒல்லும்வகையா லுரைத்ததுமென்னிலோ
சொல்லியசொல்லுஞ் சுகமாகுதுமென
எண்ணியெண்ணி யேககங்கொண்டப்
புண்ணியசங்கப் புலவர்புகன்ற
செய்யுட்களெவையுஞ் செவ்விதினேதி
உப்லதேபயனென வுவப்புறாஉம்பாண்டிநன்
னாட்டுளவிராம நாதர்தங்கமலத்
தாட்டலைகொண்டு தகவுடனேத்தி
அவமெலாமகற்ற வருளமுதுண்ணுஞ்
சிவஞானதேவர் செய்தவக்கடலிடைத்
தோற்றியசெம்மணி தூயகுணமணி

நற்கவிப் புலவர் நாடிப்புகழ்மணி
அந்தணர் சிவபிரா னடியவரெவர்க்கும்
வந்துளவளமெலாம் வழங்கவுண்மதித்தாங்
கியாதொருபொருளு மில்லையென்றுதருள்
சேதுபதியெனுஞ் செல்வன்செங்கோல்
கோடாவகைநிறீஇக் குடிகள்பலரும்
வாடாவகையான் மகிழ்ந்துபுரந்தே
அறத்தாறித்தென் றறிந்தாள்றனமைந்தசெற்
றிறத்தாறறியுந் தோச்சிநன்னூலொடு
மதிநுட்பமுமுள மாண்பமைவள்ளல்
அதிநுட்பமியாவையு மகற்றுமாண்டகை
தன்பெயரதனாற் றனபதியிவனென
மண்புவியோர்கள் மதித்திடவாய்ந்த
பொன்னுசாமிப் புலவர்சிகாமணி
துன்னுற்சாகமொடு தொகுத்தியற்றுந
என்றுணைசெய்ய வியற்றமிழ்க்கடலைக்
குன்றுடைமுனியெனக் குடியாதுகுடித்துக்
களிப்புறுகின்ற கவிராசபண்டிதன்
தளிப்புறுசெஞ்சடைச் சங்கரன்பதமலர்
அல்லும்பகலு மன்புடனினைத்தும்
இல்லையம்பூர்ச் செந்நாப்புலவன்
சந்திரசேகர தகுபெயரினன்
புந்தியினுய்ந்த பொற்புளதாந்தனிப்
பாடற்றிரட்டெனும் பாற்றிரட்டதனை
நீடக்கருங்கொலா னிசம்மித்திடாது
பாருள்வாழ்வோர் பண்டுகண்டிலாச்
சீருள்வரியாற் றிகழப்பதித்தனன்
கனிதமிலாவளங் காட்டுபுவிளங்கும்
மணவிநன்னகர்வாழ் மகிபதிகளவிலும்
சிவனடிமறவாச் சிந்தையன்சான்றோர்
தவவிலாக்கேள்வித் தகைசாலறிஞன்
பெரியதம்பிப் பெயரினன்
உரியவுலக முமைப்புறற்பொருட்டே.

இஃது சென்னைத் துரைத்தனக்கல்விச்சங்கத்தில் தமிழ்ப்புலவராகிய
அஷ்டாவதானம்
வீராசாமிசெட்டியாரவர்களாலியற்றப்பட்டது.

நேரிசை—ஆசிரியப்பா.

திருமலிகூடற் பெருநகர்வயிய
புலம்புரிபுலவராம் வலம்புரிச்சங்கமும்

காளமேகமா நீள்கரிமருப்பும்
வள்ளுவரென்னுந் தெள்ளுநற்கதலியும்
சீருயரௌவை யாரெனுஞ்சாலியும்
ஓட்டக்கூத்தராம் வட்டவாரிசமும்
புகழேந்தியென்னுந் திகழேந்துதிகிரியும்
உம்பர்வியந்திடுங் கம்பராகன்னலும்
அழிவறுபொய்யா மொழியெனும்பூகமும்
தேசுறுசிவப்பிர காசராமதியமும்
மாசிவஞான தேசிகப்புயலும்
ஏனைப்புலவராம் பாணிறவிப்பியும்
அற்புதமாசப் பற்பலவமையத்
தாங்காங்குதவிய பாங்காகியதனிப்
பாடலென்னும் பீடுறுபல்வகைச்
சந்தங்கேழ் இரத்நமணியின்
வர்க்கமதனைப் பொற்சம்மியன்போல்
வடுத்தவிர்ந்திடவாய்ந் தெடுத்துவிளுத்தகச்
சேர்த்தொருவடமாக் கோத்துநிரல்பட
இப்புவியோர்க ளிரும்பூதெய்தச்
செப்பமாகத் திரட்டியச்சிடுகென்
றாசரோறுவினை செய்பூந்தாரான்
இரவலர்க்கற்பகம் வரகுணமேரு
மருமலர்க்கசனி கருணைவாரிதி
பல்வளமோங்குஞ் செல்வப்புவிமகள்
இலகுமுகத்திற் றிலகமெனக்கிளர்
மேதகுராம நாதபுரம்வாழ்
சிவஞானதேவன் தவமோருருவாய்
வந்தவதரித்த மைந்தனிலத்திடை
அருங்கலையனைத்து மொருங்கினிதுணர்ந்தோன்
தென்னவன்போற்றமிழ் தன்னைவளர்ப்பவன்
பொன்னுசாமி யென்னும்புரந்தான்
நன்னயமாகச்சொன்ன சொன்மேற்கொளீஇ
ஆழ்திரைப்பொன்னி சூழ்புனனாட்டினில்
மல்லலம்பழனத் தில்லையம்பூர்வரும்
இந்திரதருநிகர் சந்திரசேகரகவி
ராசபண்டிதனா லாசறத்திற்றிருத்தித்
தேமலர்ச்சோலையுந் தாமரைவாவியும்
மன்னியமணலி யென்னுமாநகரோன்
சால்புறுகின்ற சைவசிகாமணி
பாலியென்னுஞ் சீலமார்நதியினன்
இவனுநல்லொளிசேர் குவளைமாலையான்

விரிபுகழ்நிலவிய பெரியதம்பி
எனப்பெயர்மருவிய வனப்புறுகுணநிதி
கவிஞர்குழாங்கண்டு வகையின்வியக்கப்
பற்பலதிசையும் பரவப்
பொற்புடன்பதித்துப் புலப்படுத்தினனே.

சென்னைக்கல்விச்சங்கத்து மதறசா ஈ ஆஜம்என்னும்பாட்சாலையில்
தமிழ்ப்புலமைநடாத்தும்-கூவம்
க-சிதம்பரமுதலியாரவர்களாலியற்றப்பட்டது
கழிநெடிலடி-ஆசிரியவிருத்தம்

சொல்லையம்பூரணமதியிற்றபுத்தாய்ந்துண்மை
தொடர்பொருடேர்திருக்கடவுட்பலகைச்சங்கத்
தொலைவில்புகழ்க்கவிஞர்முதற்றமிழ்மேதக்க
சுருதிமொழித்தலைவர்பண்டுதொகுத்துச்சேர்ந்த
செல்லையம்பூருகததினியசுவைபாலிக்குஞ்
செழுங்கனியவெனப்பயத்தற்கியநூலன்றிச்
சிலநிமித்தத்துளுற்றபலகவிதைச்செம்பொன்
றிகைமறைந்தங்குளுறவுளிகாண்பெரியதாகத்
தில்லையம்பூர்ச்சந்திரசேகரப்பேர்வாய்ந்த
தெளிதருநாவலனெனுமஞ்சனங்சண்கொண்டு
தெரிந்தெடுத்தச்சினிற்பதிப்பித்தெவர்க்குங்கல்விச்
சிறுமைகெடக்களிதுலங்குந்திறந்தந்தானுற்
றெல்லையம்பூர் சடிலனையுண்ணெகிழ்ந்துபோற்றுந்
தூய்மையும்வாய்மையுமுடையான்காமகாதச்
சொன்மருவுபுரன்பொன்னுசாமிமாறன்
சொல்மணவிப்பதிப்பெரியதம்பிவேளே.

தனிப்பாடல்களைத்திரட்டிக்கொடுத்த திருக்காட்டுபள்ளி
இராமசாமிமுதலியாரவர்கள்சிறப்பு.
கழிநெடிலடி-ஆசிரியவிருத்தம்.

சீர்கொண்டமணிமாடமேனிலையின்முகிலுலவச்சிறப்பினோங்கும், திருக்காட்டுபள்ளியெனுமெழிலூரான்செங்குவளைச்செழும்பூந்தாரான், கார்கொண்டவேங்கடநன்மலையானேர்பாலிநதியுடையோனகன்னன், சடனுலகம்புகழ்ந்திடுநல்வேளாளர்மரபுதித்தோன்கருதுமேலோன், வார்கொண்டமுலைமாதர்மடலூருமெழின்மாரன்மதிக்குஞ்சீலன், வாய்மைபெறிராமசாமிக்குரிசிலோனைம்பான்வருடங்காரும், ஏர்கொண்டவன்பினொடுபொருள்செலவிட்டருஞ்செய்யுளிதினிற்றேடி, எழுதிவைத்தபலபாட்டுப்பிரதியொன்றுதந்துபுகழிங்குற்றனே.

சாத்துகவிகள்-முற்றிற்று.

இஃது தமிழ்ப்புலவராகிய-கூடலூர்

இருசப்பஉபாத்தியாயரவர்களால்

இயற்றப்பட்டது.

---

கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

நற்கவிஞ ராங்கம்பர் காளமேகம்
  நவில்பொய்யா மொழிவெள்ளை நயந்துரைத்த
பொற்கவினையத் திரட்டியச்சிற் பதிக்கவென்னப்
  பொன்னு சாமித்தேவன் பொறையான்மிக்கோன்
சிற்குணன்ருள் பணியன்பன் சொல்லச்சந்திர
  சேகரனுங் கவிராஜன் திருத்திநல்க
ஏற்குலவு பெரியதம்பி மணலிவாசன்
  இருஞ்சிலைமே லெழுத்துப்போ லியற்றினனே.

---

இஃது

ஸ்ரீமஹாபாரதக்கீர்த்தனைசெய்த

முத்துராமகவிராயர் தமையன்குமாரராகிய

கோ-சபாபதிமுதலியாரவர்களால்

இயற்றப்பட்டது.

---

கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

தலைமைபெறுசைவராஞ் சிவஞானதேவர்
  தருராமநாதபுரநற்
சமஸ்தானமதனுக்கு முயர்பரமசிவனடி
  தனக்குமானேசர்வழுதி

தானென்னமுத்தமிழ்ப் பைங்கூழ்தழைத்திடச்
  சந்ததம்பொன்மாரிபெய்
தகைமையதனாற்பொன்னு சாமிதேவப்பேர்கொள்
  தனுமாரர்புகலவளவில்

கலைகளுணர் தில்லையம் பூர்ச்சந்திரசேகர
கவிராஜபண்டிதரும்வண்
காஞ்சிமாநகர்மேவு முசிதகனவித்துவான்
கச்சபாலயருமவர்தம்

கருத்தின்படிக்குச்செய் திருவோமெனவக்
கணங்கங்கணங்கட்டியே
கணைகடலிடைப்பல விடங்களிற்சிதறிவெகு
காலமுன்வீழ்ந்திருந்த

அலைகின்றபொருடனைக் கண்டெடுத்தாலென
வநேகநாடாறுமாறு
அவனியில்வழங்குமெண் ணறுதனிப்பாடல்க
ளவைக்குணயமுற்றவைகளை

அன்றுசொன்னவர்கருத் திற்சனுவும்வழுவா
தனந்தமுறையதிநுட்பமாய்
ஆராய்ந்தொருங்குசேர்த் தகிலமெல்லாம்புகழ
வச்சிற்பதித்ததைக்கண்

டுலகிலிவ்விருவர்தங் கல்வித்திறத்தையோர்ந்
துணராதுவித்தைக்கியான்
ஒருவனேயென்றெண்ண விழிவென்னவாறுமுகவ
னொளிரகங்குன்றினின்று

றுயர்முனிவனெண்சா ணுடம்புமொருசாணினு
மொடுங்கினனிவர்புலமைதேர்ந்
தாகவேந்தொருகால ருந்திவிழியிமையாம
லோடியதமுற்றனனரோ.

சாத்துகவிகள்—முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

வித்வசிரோமணியாகிய

# காளமேகப்புலவர்

## அவ்வவ்வமயங்களிற்கூறிய தனிப்பாடற்றிரட்டு.

———0———

காப்பு.

வெண்பா.

ஏரானைக்காவிலுறை யென்னானைக்கன்றளித்த
போரானைக்கன்றுதனைப் போற்றினால்-வாராத
புத்திவரும்பத்திவரும் புத்திரவுற்பத்திவரும்
சத்திவருஞ்சித்திவருந் தான்.

———

வெள்ளைக்கலையுடுத்து வெள்ளைப்பணிபூண்டு
வெள்ளைக்கமலத்தில் வீற்றிருப்பாள்-வெள்ளை
அரியாசனத்தி லரசரோடென்னைச்
சரியாசனம்வைத்த தாய். (க)

ஆமணக்குக்கும்-யானைக்கும்.

முத்திருக்குங்கொம்பசைக்கும் மூரித்தண்டேந்திவரும்
கொத்திருக்குநேரே குலைசாய்க்கும்-எத்திசைக்கும்
தேமணக்குஞ்சோலைத் திருமலைராயன்வரையில்
ஆமணக்குமால்யானை யாம். உ

வைக்கோலுக்கும் யானைக்கும்.

வாரிக்களத்தடிக்கும் வந்துபின்புகோட்டைபுகும்
போரிற்சிறந்து பொலிவாகும்-சீருற்ற
செக்கோலமேனித் திருமலைராயன்வரையில்
வைக்கோலுமால்யானை யாம். ங

பாம்புக்கும் வாழைப்பழத்துக்கும்.

நஞ்சிருக்குந்தோலுரிக்கு நாதர்முடிமேலிருக்கும்
வெஞ்சினத்திற்பற்பட்டான் மீளாது-விஞ்சுமலர்த்
தேம்பாயுஞ்சோலைத் திருமலைராயன்வரையில்
பாம்பாகும்வாழைப் பழம். ச

பாம்புக்கும் எள்ளுக்கும்,

ஆடிக்குடக்கடையு மாடும்போதேயிரையும்
மூடித்திறக்கின் முகங்காட்டும்-ஓடிமண்டை
பற்றின்பரபரெனும் பாரிற்பிண்ணாக்குமுண்டாம்
உற்றிடுபாம்பெள்ளெனவே யோது. ௫

(பிண்ணாக்கு-பிளவுள்ளநாக்கு)

பாம்புக்கும் எலுமிச்சம்பழந்துக்கும்,

பெரியவிடமேசேரும் பித்தர்முடியேறும்
அரியுண்ணு பூப்புமே லாடும்-எரிகுணமாம்
தேம்பொழியுஞ்சோலைத் திருமலைராயன்வரையில்
பாம்புமெலுமிச்சம் பழம். (அரி-காற்று-அரிபடல்) ௬

முகுந்தனுக்கும் முறத்துக்கும்.

வல்லரிபாயுற்றிடலான் மாதர்கையிற்பற்றிடலான்
சொல்லரியமாப்புடைக்கத் தோன்றுதலால்-வல்லோர்
அகந்தனிலேவாழ்தலா லன்றுலகளந்த
முகுந்தனுமேயாகும் முறம். ௭

சந்திரனுக்கும் மலைக்கும்.

நிலவாய்விளங்குதலா னீள்வான்படிந்து
சிலபோதுலாவுதலாற் சென்று-தலைமேல்
உதித்துவரலா லுயர்மாமலையை
மதிக்குநிகராக வழுத்து. ௮

நாய்க்குந் தேங்காய்க்கும்.

ஓடுமிருக்குமத னுள்வாய்வெளுத்திருக்கும்
நாடுங்குலைதனக்கு நாணாது-சேடியே
தீங்கானதில்லாத் திருமலைராயன்வரையில்
தேங்காயுநாயுமெனச் செப்பு. ௯

மீனுக்கும் பேனுக்கும்.

மன்னீரிலேபிறக்கு மற்றலையிலேமேயும்
பின்னீச்சிற்குத்தும் பெருமையால்-சொன்னேன்கேள்

தேனுந்துசோலைத் திருமலைராயன்வரையில்
மீனும்பே னுஞ்சரியாமே. ௰

பனைமரத்துக்கும் வேசைக்கும்.

கட்டித்தழுவுதலாற் கால்சேரவேறுதலால்
எட்டிப்பன்னாடை யிழுத்தலால்—முட்டப்போய்
ஆசைவாய்க்கள்ளை யருந்துதலாலப்பனையும்
வேசையெனலாமே விரைந்து. ௰௧

வெற்றிலைக்கும் வேசைக்கும்.

கொள்ளுநகையானீரிற் குளிக்கையான்மேலேறிக்
கிள்ளுநகையாற்கட்டிக் கிடக்கையால்—தெள்ளுபுகழ்ச்
செற்றலரைவென்ற திருமலைராயன்வரையில
வெற்றிலையும் வேசையாமே. ௰௨

கண்ணாடிக்கும் அரசனுக்கும்.

யாவருக்குரஞ்சனைசெய் தியாவருக்குமவ்வவராய்ப்
பாவனையாய்த்தீதகலப் பார்த்தலால்—மேவும்
எதிரியைத்தன்னுள்ளாக்கி யேற்றரசத்தால்
சதிருறலாலாடியரசாம். ௰௩

கூத்தியாருக்கும் குரங்குக்கும்.

ஓட்டங்கடியதா லுள்ளவரைமேவுதலால்
சேட்டையெவரிடத்துஞ் செய்தலால்—நாட்டமுடன்
காத்திரத்திற்குட்டியுறக் கட்டுதலாற்றெட்டுதலால்
கூத்தியர்க்குநேராங் குரங்கு. (ஓட்டம்-உதடு) ௰௪

குதிரைக்கும் காவிரியாற்றுக்கும்.

ஓடுஞ்சுழிசுத்த முண்டாகுந்துன்னலரைச்
சாடும்பரிவாய்த் தலைசாய்க்கும்—நாடறியத்
தேடுபுகழான் றிருமலைராயன்வரையில்
ஆடுபரிகாவிரியாமே. (துன்னலர்-பகைவர்-மலர்) ௰௫

கீரைப்பாத்திக்கும் குதிரைக்கும்.

கட்டியடிக்கையாற் கால்மாறிப்பாய்கையால்
வெட்டிமறிக்கின்ற மேன்மையால்—முட்டப்போய்

மாறத்திருப்புகையால் வண்டினைப்பாத்தியுடன்
ஏறப்பரியாகுமே. ௰௬

கதவுக்கும்-ஆட்டுக்கும்.

செய்யுட்கிடைமறிக்குஞ் சேர்பலகையிட்டுமுட்டும்
ஐயமறமேற்றா ளடர்க்குமே-துய்யநிலை
சேடிப்புகழ்சேர் திருமலைராயன்வரையில்
ஆடுங்கதவு நிகராம். ௰௭

குதிரைக்கும்-ஆட்டுக்கும்.

கொம்பிலையேதினிதின்னுங் கொண்டதன்மேல்வெட்டுதலால்
அம்புவியினன்னடைய தாதலால்-உம்பர்களும்
தேடுநற்சோலைத் திருமலைராயன்வரையில்
ஆடுங்குதிரையுநேராம். ௰௮

துப்பாக்கிக்கும்-ஓலைச்சுருளுக்கும்.

ஆணிவரையுறலா லாணகுறிப்பேதாலால்
தோணக்கருமருந்தைத் தோய்ந்திடலால்-சேணிலத்தில்
செப்பார்க்குதவாத் திருமலைராயன்வரையில்
துப்பாக்கியோலைச் சுருள். ௰௯

வானவில்லுக்கும்-விஷ்ணுவுக்கும்-வெற்றிலைக்கும்.

நீரிலுளவா னிறப்பச்சையாற்றிருவால்
பாரிற்பகைதீர்க்கும் பான்மையால்-சாருமனுப்
பல்வினையைமாற்றுதலாற் பாரீர்பெருவான
வில்விண்டுநேர்வெற்றிலை. (பல்வினை-பல்நோய்-தந்தரோகம்) ௨௰

பூசுணிக்காய்க்கும்-பரமசிவனுக்கும்.

அடிநந்திசேர்தலா லாகம்வெளுத்துக்
கொடியுமொருபக்கத்திற் கொண்டு-வடிவுடைய
மாசுணத்தைப்பூண்டு வளைத்தழும்புபெற்றதனால்
பூசுணிக்காயீசனெனப் போற்று.(நந்தி-காம்பு) ௨௧

ஓடத்துக்கும்-நிதம்பத்துக்கும்.

பலகையிடுமுள்ளே பருமாணிதைக்கும்
சலமிறைக்குமாளேறித் தள்ளும்-உலகறிய

ஓடமுமொன்றே யுலகநாதன்பெண்டீர்
மாடமுமொன்றேற்ற மயிர் ௨௨

காண்டகத்துக்கும்-பெண்குறிக்கும்.

இட்டிட்டுவாங்குதலா லின்பவெள்ளந்தோன்றுதலால்
பட்டிட்டுமூடி மறைக்கையால்-முட்டத்
தெருண்டோர்கள்போற்றுந் திருமலைராயன்சீர்க்
காண்டகமும் பெண்குறியுங்காண். ௨௩

அரசதிருச்சிற் றம்பலவாணவந்
தாருபமிகே சசிதம்-பாதே
வசிதம்பாதே வசிதம்பாதே
வசிதம்பாதே வனே. ௨௪

இந்தோதிலகநுதல் ராமராமாவசைக்
கொந்தோகளபமுலை கோவிந்தா-சந்ததமும்
வேலோவிணைவிழிகள் வேங்கடவாநல்லவயி
றுலோகா ணாராயணா. ௨௫

ஒன்றிரண்டுமூன்றுநான் கைந்தாறுவேழெட்டு
ஒன்பதுபத்துப் பதினொன்று-பன்னி
ரண்டுபதின் மூன்றுபதி நான்குபதினைந்துபதி
னாறுபதினேழ்பதி னெட்டு. ௨௬

ரு-டு-வரப்பாடியது.

ஓ,கா,மா,வீ,தோ,வுரைப்பன்:டு,டு,டு,டு,டு,
நாகார்குடந்தை நகர்க்கதிபர்-வாகாய்
எடுப்பர்நடமிடுவ ரேறுவரன்பர்க்குக்
கொடுப்பாரணிவர் குழைக்கு. ௨௭

எடுப்பர் - ஓடு,நடமிடுவர் - காடு, ஏறுவர்- மாடு, அன்பர்க்குக்கொடுப்பர் - வீடு,குழைக்கணிவர்-தோடு.

குடத்திலேகங்கைபடங்குமெனப்பாடியது,

விண்ணுக்கடங்காமல் வெற்புக்கடங்காமல்
மண்ணுக்கடங்காமல் வந்தாலும்-பெண்ணை
இடத்திலேவைத்த விறைவர்சடாம
குடத்திலேகங்கை யடங்கும். ௨௮

பச்சைவடம் பாகுசேலைசோமன் என்றுபாடியது.

மாயன்றுயின்றதுவு மாமலராள்சொல்லதுவும்
ஏயகுருந்திற்கொண் டேறியதும்—தூய
இடப்பாகன்சென்னியின்மே லேறியதும்பச்சை
வடப்பாகுசேலை சோமன். உ௯

மாயன்றுயின்றது-பச்சைவடம், மாமலராள்-சொல்-பாகு, குருந்திற்கொண்டேறியது-சேலை, பரமசிவன் சிரசின்மேலேறியது-சோமன் (பச்சைவடம்—ஆலிலை)

இன்னரிவாசிக்குங் கிளியெனப்பாடியது.

ஆடல்புரிந்தானென் றுமந்நாளிலேழுவர்
பாடலுகந்தானென்றும் பான்மையினல்-கூடலிலே
நன்னரிவாசிக்குநடை பயிற்றினனென்றும்
இன்னரிவாசிக்குங் கிளி. ௩௰

பொன்னுவனையிலை காய் பூ வென்றுபாடியது.

உடுத்ததுவுமேய்த்ததுவு முப்பர்கோன்றன்னால்
எடுத்ததுவும்பள்ளிக் கியையப்-படுத்ததுவும்
அந்நாளெறிந்ததுவு மன்பிணிரந்ததுவும்
பொன்,னு,வனை,யிலை,காய்,பூ. ௩௧

தோய்ந்தான் மேய்த்தான் குடையா த்தூக்கினன் மென் மேலாச்
சாய்ந்தானெறிந்தான்பின் சாப்பிட்டான்—ஆய்ந்துசொலும்
மன்னுவாத்திலவருமால் சாமிநாதாகேள்
பொன்,னு,வனை,யிலை,காய்,பூ. ௩௨

செங்கழுநீர்க்கிழங்கென்று பாடியது.

வாதமணரேறியது மாயன்றுயின்றதுவும்
ஆதிதடித்தாட்கொண்ட வவ்வுருவும்-சீதானூர்
தாள்கொண்டளந்ததுவுந் தண்கச்சிக்காவலா
கேள்செங்கழு நீர்க்கிழங்கு, ௩௩

அமணரேறியது-செங்கழு, மாயன்றுயின்றது-நீர், ஆதிதடுத்தாண்டவுரு-கிழம், தாள்கொண்டளந்தது-கு(கு-பூமி.)

நாநீறூரேயென்று பாடியது.

அரையின்முடியிலணி மார்பினெஞ்சில்
தெரிவையிடத்தமர்ந்தான் சேவை புனையறமே

தந்தைபிறந்திறவாத் தன்மையினாற்றன்மாமன்
வந்துபிறந்திறக்கும் வண்மையினால்-முந்தொருநாள்
விணிக்குநீவலை யெரித்தான்மகன்மாமன்
காணிக்குவந்திருந்தான் காண். ௰௫

தாதிதூதோதீதுதத்தை தூதோதாது
தூதிதூதொத்தித்த தூததே-தாதொத்த
துத்திதத்தாதே துதித்துத்தேதொதித்து
தித்தித்ததோதித் திதி. ௰௬

முந்நான்கிலொன்றுடையான் முந்நான்கிலொன்றெடுத்து
முந்நான்கிலொன்றின்மேன் மோதினான்-முந்நான்கில்
ஒன்றறிக்காலாகுமோ ஓமடையாயிலே
அன்றினைத்தான் வாராவிட்டால். ௰௭

ஆனாரிலையே யயனுந்திருமாலும்
காணாடிமுடிமுன் காண்பதற்கு-மேனாள்
இரவுதிருவாரூரி லெந்தைபிரான்சென்ற
பரவைதிருவாயிற் படி. ௰௮

சங்கரர்க்குமாறுதலை சண்முகர்க்குமாறுதலை
ஐங்கரர்க்குமாறுதலை யானதே-சங்கைப்
பிடித்தோர்க்குமாறுதலை பித்தாநின்பாதம்
படித்தோர்க்குமாறுதலை பார். ௰௯

வாதக்காலாந்தமக்கு மைத்துனர்க்குநீரிழிவாம்
போதப்பெருவயிறாம் புத்திரனுக்-கோதக்கேள்
வந்தவினைதீர்க்க வகையறியார்வேறோர்
எந்தவினைதீர்த்தா ரிவர். ௨௰

சீரங்கத்தாருந் திருவானைக்காவாரும்
போரங்கமாசப் பொருவதேன்-ஓரங்கள்
வேண்டாமிதென்ன விபரந்தெரியாதோ
ஆண்டானுக்காதனு மானால். ௨௰௧

உத்திரத்துக்கோர்நாளு ரோகணிக்குப்பத்தாநாள்
சித்திரைக்குநேரே சிறந்தநாள்-எத்திசையும்
காராரும்பூஞ்சோலைக் கண்ணபுரம்வாழ்சவரி
நாராயணன்பிறந்த நாள். ௨௰௨

சிரித்துப்புரமெரித்தான் சிந்துரத்தைப்பற்றி
உரித்துத்திரம்பாய வுடுத்தான்-வருத்தமுடன்
வடமெடியாருடனே வானவருந்தானவரும்
ஓடிப்பயந்தித் தகஞ் சுன்னி. ௨௰௩

ஆலங்குடியானை யாலாலமுண்டானை
ஆலங்குடியானென் றார்சொன்னார்—ஆலங்
குடியானே யாயிற் குவலயத்தோ ரெல்லாம்
மடியாரோ மண்மீதிலே. ௩௪

காவலனெங்கள் கனவைப்பாஞ்சோளேசன்
மாவலிகங்கை மணிவாரி—ஆவணமென்
றப்புளங்கைதோய்க்க வதில்வாரிமுத்தைக்
கொப்புளமென்றாதுங் குரங்கு. ௩௫

பொன்னஞ்சடையறுகம் புல்லுக்கும்பூர்புனற்கும்
தன்னெஞ்சுவகையுறத் தாவுமே—அன்னங்கள்
செய்க்கமலத்தாற்றுலவுந் தில்லைநடராசன்
கைக்கமலத்துற்றமான் கன்று. ௩௬

ஏய்ந்ததனங்களிரண்டு மிருபாகற்காய்
வாய்ந்தவிடைசெக்குலக்கை மாத்திரமே—தோய்ந்தகுழல்
முக்கலச்சிக்கும்பிடிக்கு மூதேவியாள்கமலைக்
குக்கலிச்சிக்குங்கலைச் சிக்கு. ௩௭

நஞ்சுகுடிகொண்டானை நாலுந்தெரிந்துமதன்
இஞ்சிகுடிதன்னிலும்வந் தெய்வானே—விஞ்சு
முலைச்சிகரத்தாலழுத்தி முத்தமிட்டுச்சற்றே
கலைச்சிகரத்தாலணைத்தக் கால். ௩௮

தீத்தானுங்கண்ணிலே தீத்தானுங்கையிலே
தீத்தானுமுன்றன் சிரிப்பிலே—தீத்தானுன்
மெய்யெலாம்புள்ளிருக்கும் வேளனோவுனையிந்தத்
தையலாளெப்படிச்சேர்ந் தாள். ௩௯

வெண்ணெய்திருடியுண்ட வேணியானிருக்கக்
கண்ணன்மேல்வைத்த களவேது—பெண்ணைத்
தலையிற்சுமந்தான்மால் சர்ப்பத்திலேறி
அலையிற்றுயின்றா னான் ௪௰

எட்டிகுளத்தி லிருந்துசாக்குவிற்கும்
குட்டிசெட்டிதன்மகளைக் கொண்டுபோய்—கொட்டுதங்கே
ஆயிரம்யானை யெழுநூறுகூன்பகடு
பாயும்பகடெண்பத் தைந்து. ௪௧

தண்டாங்கூர்மாசனங்காள் சற்குணர்நீ ரென்றிருந்தேன்
பண்டங்குறையவிற்ற பாவிகாள்—பெண்டுசனைத்
தேடியுண்ணவிட்டீர் தெருக்கள்தெருக்கடோறும்
ஆடிமுதலானி வணாக்கும். ௪௨

நாராயணனைநாராயண னென்றோர்பன்
ஓராமற்சொன்ன வுறுதியால்-நேராக
வாரென்றால்வரென்பேன் வாளென்றால்வள்ளென்பேன்
நாரென்றானரென்பேன் நான். ௱௰௩

வாழ்த்ததிருநாகை வாகானதேவடியாள்
பாழ்த்தகுரலெடுத்துப் பாடினாள்-நேற்றுக்
கழுதைசட்டவண்ணான் கண்டேன்கண்டேனென்று
பழுதையெடுத்தோடிவந்தான் பார். ௱௰௪

காலையிலும்வேலை கடையக்கயிறுக்கும்
மாலையிலும்பூமுடிக்க வாழுமே-சோலைசெறி
செய்யிலாரம்பயிலுஞ் செந்துருத்திமாநகர்வாழ்
பொய்யிலாமெய்யரிடம் பூண். ௱௰௫

மண்டலத்திலுளும் வயித்தியராய்த்தாமிருந்தும்
கண்டவினைதீர்க்கின்றார் கண்டிரோ-தொண்டர்
விருந்தைப்பார்த்துண்டருளும் வேளூரொன்னாதர்
மருந்தைப்பார்த்தாற்சுத்த மண். ௱௰௬

கூடல்புனைவாயல் குற்றாலமாப்பனூர்
ஏடகநெல்வேலி யிராமேசம்-ஆடானை
தென்பரங்குன்றஞ்சுழியல் தென்றிருப்புத்தூர்காசி
வன்கொடுங்குன்றம்பூ வணம். ௱௰௭

பண்புளருக்கோர்பறவை பாவத்திற்கோரிலக்கம்
நண்பினைக்கண்டக்கா னற்காலி-திண்புவியை
ஆள்வார்மகனையழகிய சொக்கர்க்காவம்
நீள்வாகனநன் னிலம். ௱௰௮

சதுராங்கர்சங்கத் தழகர்செங்கைச்சங்கை
அதரமிசைவைத்திலரோ யாயின்-முதலை
வருங்குளத்தின்முண்டகத்தை வைப்பரன்றேயன்று
பொருங்களத்திலாற்றுவர்முன் போய். ௱௰௯

கண்டக்காற்கிட்டுங் கயிலாயந்தைக்கொண்டுட்
கொண்டக்கான்மோட்சங் கொடுக்குமே-கொண்டத்தூர்
தண்டைக்காலம்மை சமைத்துவைத்தபூசணிக்காய்
ஆண்டார்க்காமீசருக்கு மாம். ௱௨௰

போலதிறமாவார்க்குப் பூணாரமாவானை
எலவைதைசெய்தா லியல்பாமோ-சாலப்
பழிக்கஞ்சுந்தென்மதுரைப் பாவைபிருநாங்கு
விழிக்கஞ்சன்சோமனலை வேந்து. ௱௨௰௧

கண்ணாவிரிங்கறியுங் காட்டுசிறுத்தொண்டரன்பிற்
பண்ணுசிறுவன்கறியும் பற்றாதோ-தண்ணேறுடு
மட்டிலையாயுஞ்சோலை மருதீசரேபன்றிக்
குட்டியையேன்றாத்திர் குறித்து. ௱௨௨

மாடுதின்பான்பார்ப்பான் மறையோதுவான்குயவன்
கூடிமிகமண்பிசைவான் கொல்லனே-தேடி
இரும்படிப்பான்செக்கா னெண்ணெய்விற்பான்வண்ணான்
பரும்புடைவைதப்பும் பறை. ௱௨௩

ஆயனுக்குக்கண்மூன்று மாதிசிவனுக்கிருகண்
மாயனுக்குச்செங்கையிலே மான்மழுவா-நேயமுடன்
சங்காற்குச்சங்காழி தான்மாலுக்காலமாம்
மங்கையிடத்தாற்காகு மன். ௱௨௪

கண்ணபுரங்கோயிற் கதவடைத்துத்தாழ்போட்டார்
மண்ணையுண்டார்வெண்ணெயுண்ட மாயனோர்-என்னும்
சிக்கப்பனையேந்திச் செங்காட்டிவீசர்
இரக்கப்புறப்பட்டா ரென்று. ௱௨௫

கொன்றைமலர்தரித்தான் கோபாலன்கோலெடுத்து
நின்றுகுழலூதினு னீள்சடையோன்-பொன்றிகழும்
அக்கினிக்கான்மாய னாவணையிற்கண்வளர்ந்தான்
சிக்கலிலேவாழுஞ் சிவன். ௱௨௬

திருந்தாடாவணியுந் தென்கமலையீசர்
இருந்தாடாதென்செய் திடுவார்-பொருந்த
ஒருகாலேயல்லவே யொண்டொடிக்காவன்
இருகாலுஞ்சந்துபோ னல். ௱௨௭

சந்துபோதல்-தூதுபோதல்-உண்மைவிசைகல்.

உள்ளங்கால்வெள்ளெலும்பு தோன்றவொருகோடி
வெள்ளங்காலந்திரிந்து விட்டோமே-உள்ளபடி
ஆமூர்முதலி யமார்கோவிந்திருக்கப்
போமூரறியாமற் போய். ௱௨௮

கம்மாளனைக்கிக் கணக்கனைவேதாதித்தார்
செம்மான்மதுரைத் திருவரிசை-அம்மாகேள்
வாணியனும்பொன்னேரி வாழும்வெள்ளாழனுமே
சேணியனுமன்றே தெரிந்து. ௱௨௯

கம்மாளன்-பாலத்தையுடையவன், அக்கிக்கணக்கன்-அழற்கண்ணையுடையருத்தன், செம்மான்-(சக்கிலி) சிவந்தபானையுடையவன், வாணி

யன்-பிரமன், பொன்மேனி-அழகையுடைய இலக்குமி, வெள்ளாழன்-பாற் கடலையுடையான், சேணியன்-இந்திரன்.

பாரளக்குந் தானுசெல்லும் பையாவின்மேனடிக்கும்
சீரகலிசாபத்தைத் தீர்க்குமே-ஊருகில்
சண்டச்சகடுதைக்குந் தையலாய்காரீல
கண்டத்தாரூரான் கழல். ௱௩௰

காலாற்படியளக்குங் கன்னிடந்துபூசிக்கும்
சேலாங்கமடமாஞ் சிங்கமாம்-பாலாகும்
ஆழியப்பிலேதுயிலு மைவர்க்குத்தூதாகும்
வீழியப்பனேறும் விடை. ௱௩௧

(கமடம்-ஆமை.)

கடம்பவனச்சொக்கருக்குக் கண்ணன்றன்வேறு
இடம்பெரியகண்ணொன்றை யீந்தான்-உடப்பதனிற்
சொம்பாதியானான் சுமக்கவெருதானான்
அம்பானான் றேவியுமானான். ௱௩௨

கன்னபுரமாலே கடவுளிலுநீயதிகம்
உன்னிலுமோயானதிக மொன்றுகேள்-முன்னமே
உன்பிறப்போபத்தா மூயர்சிவனுக்கொன்றுமில்லை
என்பிறப்பெண்ணத் தொலையாதே. ௱௩௩

ஆனைகுதிரைதரு மன்னைதனைக்கொன்றகரி
சேனைமன்னரைக்காய்துன் றீயவரை-பூநெயுடன்
கூட்டியமுதிட்டான் குருக்களமராபதியான்
வீட்டிலுண்டுவந்தேன் விருந்து. ௱௩௪

அன்னவயல்சூழ்ந்திருக்கு மாரூராநெஞ்சத்தில்
இன்னம்வயிர மிருப்பதா-முன்னமொரு
தொண்டன்மகனைக்கொன்றுஞ் சோழன்மகனைக்கொன்றுஞ்
சண்டன்மாமனைக்கொன்றுந் தான். ௱௩௫

வாலிமடிந்ததுவும் வல்லரக்கர்பட்டதுவுங்
கோலமுடிமன்னர் குறைந்ததுவுஞ்-சால
மதியுடையநூற்றொருவர் மாண்டதுவுமையோ
சதிவிரகத்தால்வந்த தாழ்வு. ௱௩௬

கோளரிருக்குமூர் கோள்களவற்றவூர்
காளைகளாய்நின்று சதறுமூர்-நாளையே
விண்மாரியற்று வெளுத்துமிக்கறுத்து
மண்மாரிபெய்தவிந்த வான். ௱௩௭

கம்பத்தானைக்கடையிற் கட்டினான்கால்சாய
அம்பைத்தாவித்தான்கா லானதே-வம்புசெறி
பூவைகாள்வெள்ளைகாள் பூங்குயில்காளன்றில்காள்
பாவையாளாண்ட பதி. ௱௩௮

கம்பத்தான்-இராகவன், கடையிற்கட்டினான்-வாலி, அம்பைத்தாவித்தான்கால்-அரிதாள்.

சாரங்கபாணியாஞ் சக்கரத்தர்கஞ்சனைமுன்
ஓரங்கஞ்செய்த வுகிர்வாளர்-பாரெங்கும்
ஏத்திடுமையாக னினிதாயிலநம்மைக்
காத்திடுவரெப்போதுங் காண்.

சாரங்கம்-மான்,வில். கஞ்சன்-பிரமன், கம்சன். உமையாகர்-சிவன், மையாகர்-மால்.

கட்டளைக்கலித்துறை.

விண்ணீரும்வற்றிப்புவிநீரும்வற்றிவிருட்பியழுக்
கண்ணீரும்வற்றிப்புலவோர்தவிக்கின்றகாலத்திலே
உண்ணீருண்ணீரென்றுபசாரஞ்சொல்லியுபசரித்துத்
தண்ணீருஞ்சோருந்தருவான்றிருப்பணந்தாட்பட்டனே. ௱௪௰

விள்ளைப்புதுமைபொன்றுண்டாளவாயினின்மேவுதென்னம்
பிள்ளைக்கொருகுலைமுன்றேகுரும்பைபிடித்ததிலே
கொள்ளிக்கணைன்றிட்டியாவோர்குரும்பைகுறித்தமிர்தம்
உள்ளிற்பொதிந்தவிரண்டிளநீர்கச்சுறைந்ததுவே. ௱௪௧

ஆட்டுக்கிசைந்தவம்பலவாணரவர்க்கெதிரே
கீட்டிற்று நால்வடபாலினிற்காலெனநீதிநியல்
சூட்டிற்றருப்புஞ்செற்றவர்தம்மைச்சுமந்தலுத்த
மாட்டுக்கென்றேவிடக்காணிட்டல்சொல்லவழக்கில்லையே. ௱௪௨

பாருறியப்பலிக்குழன்றீர்பற்றிப்பார்க்குமிடத்
தோருருமில்லையிருக்கவென்றாலுமுள்ளோருமொற்றி
பேருறியத்தியாகரென்றேபெரும்பேரும்பெற்றீர்
ஆரூரிலேயிருப்பீரினிப்போய்விடுமம்பலத்தே. ௱௪௩

வாணியன்பாடிடவண்ணான்சுமக்கவடுகன்செட்டி
சேணியன்போற்றக்கடற்பள்ளிமுன்றொழத்திக்கரும்பைக்
கோணியன்வாழ்த்தக்கருமான்றுகிறனைக்கொண்டணிந்த
சேணியனவன்றட்டான்புறப்பட்டவேடிக்கையே. ௱௪௪

வாணியன்-பிரமன். வண்ணான்-நந்தி. வடுகன்-வைரவன். செட்டி-முருகன். சேணியன்-இந்திரன். கடற்பள்ளி-மாயன். கரும்பைக்கோணியன்-மதன். கருமான்றுகில்-யானைத்தோல். தட்டான்-காண்டற்கரியபரமசிவன்.

வெள்ளைக்கவிகாளமேகமேகின்னுடைய
கள்ளக்கவிக்கடையைக் கட்டு.

தெய்வப்புலமை
## ஔ வை யா ர்
அவ்வவ்வமயங்களிற்கூறியதனிப்பாடற்றிரட்டு.

மதுரமொழிநல்லுமையாள்சிறுவன்மலரடியை
முதிரநினையவல்லார்க்கரிதோமுகில்போன்முழங்கி
அதிரவருகின்றயானையுந்தேருமதன்பின்சென்ற
குதிரையுங்காதங்கிழவியுங்காதங்குலமன்னனே. (௧)

விரகர்இருவர் புகழ்ந்திடவேவேண்டும்
விரலிறையமோதிரங்கள் வேண்டும்-அரையதனிற்
பஞ்சேனும்பட்டேனும் வேண்டுமவர்கவிதை
நஞ்சேனும்வேம்பேனு நன்று. ௨

வான்குருவியின்கூடு வல்லரக்குத்தொல்கறையான்
தேன்சிலம்பியாவர்க்குஞ் செய்யரிதால்-யாம்பெரிதும்
வல்லோமேயென்று வலிமைசொலவேண்டாங்காண்
எல்லார்க்குமொவ்வொன் றெளிது. ௩

இவ்வளவுகண்ணுடையா ளிவ்வளவுசிற்றிடையாள்
இவ்வளவுபோன்ற இளமுலையாள்-இவ்வளவா
நைந்தவுடலா னலமேயுமன்மதன்றன்
ஐந்துகணையால் வாடினாள். ௪

ஐயமிடுமி னறநெறியைக்கைப்பிடிமின்
இல்லையேனுமன்ன மிட்டுண்மின்-தெய்வம்
ஒருவனேயென்று முணரவல்லீரேல்
அருவினைகளோய்ந்து மறும். ௫

அற்றதலைபோக வறுந்ததலைநான்கினையும்
பற்றித்திருகிப் பறியேனோ-வற்றும்
மரமனையானுக்கிந்த மாலைவகுத்திட்ட
பிரமனையான்காணப் பெறின். ௬

காணமல்வேணதெல்லாங் கத்தலாங்கற்றோர்முன்
கோணமல்வாய்திறக்கக் கூடாதே-நாணமற்
பேச்சுப்பேச்சென்னும் பெரும்பூனைவந்தக்கால்
கீச்சுக்கீச்சென்னுங் கிளி. ௭

சித்திரமுங்கைப்பழக்கஞ் செந்தமிழுநாப்பழக்கம்
வைத்ததொருகல்வி மனப்பழக்கம்-நித்தம்

வையத்துறைவன் மதுராபுரித்தென்னன்
செய்யத்தகாதென்று தேப்பாதே-தையலர்க்கு
வேண்டுவன கொண்டு விடியவிபோம்பாணன்
ஈண்டுவருக விரைந்து. ௨௬

கருணையாவிந்த கடலுங்கங்காக்குங்
வருணனேபாமலையன் கோவல் திருமணத்து
முன்மாரிபெய்யு முதுவாரியைமாற்றிப்
பொன்மாரியாகப் பொழி. ௨௭

முத்தெறியும்பெண்ணை முதுநீர்தூகவிர்த்துத்
தத்தியசெய்யா றலைப்பெய்து-குத்திச்
செருமலைதெய்விகன் றிருக்கோவலூர்க்கு
வருமளவுங்கொண்டோடி வா. ௨௮

பொன்மாரிபெய்யுமூர் பூம்பருத்தியாடையாம்
அந்நாள்வாலரிசி யாகுமூர்-எந்நாளுந்
தேங்குபுகழேபடைத்த சேதிமாநாடதனில்
ஓங்குந்திருக்கோவலூர். ௨௯

சொல்லாமலேபெரியர் சொல்லிச்சிறியர்செய்வர்
சொல்லியுஞ்செய்யார் கயவரே-நல்ல
குலாமாலைவேற்கண்ணாய் கூறுவமைநாடிற்
பலாமாவைப்பாதிரியைப் பார். ௩௰

கலித்தாழிசை-அல்லது-அந்தந்தடிநீண்டிசையாவையின்

ஐந்தடிக்கலித்துறையென்னலுமாம்.

இங்கட்குடையுடைச்சேரனுஞ்சோழனும்பாண்டியனும்
மங்கைக்கருகிடவந்துநின்றார்மணப்பந்தரிலே
சங்கொக்கவெண்குருகதின்றுபச்சோலைசலசலத்து
நுங்குக்கண்முற்றியடிக்கண்கறுத்துநுனிசிவந்து
பங்குக்குமூன்றுபழந்தாவேண்டும்பனந்துண்டமே. ௩௧

ஆயன்பதியி லெண்பதிவந்துற்றளக
மாயனூதுங் கருவியானாலும்-தூயமணிக்
குன்றுபோல்வீறு குவிமுலையாடன்னுடனீ
இன்றுபோலென்று மிரு. ௩௨

சிறப்பான்மணிமவுலிச் சேரமான்றன்னைச்
சுறப்பாடியான்கேட்கப் பொன்னொட்டான்-றீந்தான்
இரப்பவரென்பெறினுங் கொள்வர்கொடுப்பவர்
தாமறிவார்தன்கொடையின் சீர். ௩௩

நூற்றுப்பத்தாயிரம் பொன்பெறினு நூற்சீலை
நாற்றிங்களுக்கு மேனைந்துவிடும்-மாற்றலரைப்
பொன்றப்பொருதடக்கைப் போர்வேலகளங்கா
என்றுங்கிழியாதென் பாட்டு. கூச

வரகரிசிச்சோறும் வழுதுணங்காய்வாட்டும்
முரமுரெனவேபுளித்த மோரும்-திரமுடனே
புள்வேளூர்ப்பூதன் புகழ்ந்துபரிந்திட்டசோ
றெல்லாவுலகும் பெறும். கூரு

எசியிடலி னிடாமையேநன்றெதிரிற்
பேசுமனையாளிற் பேய்நன்று-நேசமிலா
வங்கணத்தினன்று வலியபகைவாழ்விலாச்
சங்கடத்திற்சாவதே நன்று. கூசு

சரியாய்ப்பரியாகிக் காரொருமைதானாய்
எருதாய்முழுப்புடைவை யாகித்-திரிதிரியாய்த்
தேணாக்கரல்பெற்றுமிகத் தேய்ந்துகாலோய்ந்ததே
கோணாக்காலான்வான் கொடை. கூஎ

பாடல்பெறுமே பலர்மெச்சவாழாமே
நாடறியநன்மணங்க ளாடாமே-சேடன்
இவன்வாழும்வாழ்க்கை யிருங்கடல்சூழ்பாரிற்
கவிழ்ந்தென்மலர்ந்தென்ன காண். கூஅ

காலையிலொன்றுவர் கடும்பகலிலொன்றுவர்
மாலையிலொன்றுவர் மனிதரெலாஞ்-சாலவே
முல்லானைப்போல முகமுமகமும்மலர்ந்த
நல்லானைக்கண்டறியோ நாம். கூகூ

கற்றதுகைம்மணவு கல்லா துலகளவென்
றுற்றகலைமடந்தை யோதுகிறாள்-மெத்த
வெறும்பந்தயங்கூற வேண்டாம்புலவீர்
எறும்புந்தன்கையா லெண்சாண். சம

நூலெனிலோகோல்சாயு முத்தமரேல்வெஞ்சமராங்
கோலெனிலோவாங்கே குடிசாய-நாலாவான்
மந்திரியுமாவான் வழிக்குத்துணையாவான்
அந்தவரசே யரசு. சக

செம்மான்கரத்தனருள் சேயாநெடியோனை
அம்மானெனப்பெற் றருள்வேலா-இம்மான்
கருப்பிறைக்கும்வெண்பிறைக்கும் கண்ணம்பிறைக்கும்
அருப்பிறைக்குங்கூந்த லணை. சஉ

மதியாதார்முற்ற மதித்தொருகாற்சென்று மிதியாமைகோடிபெறும்
உண்ணீருண்ணீரென் றுபசரியார்தம்மனையி லுண்ணாமைகோடிபெறும்
கோடிகொடுத்துங் குடிப்பிறந்தார்தம்மோடு கூடுதல்கோடிபெறும்
கோடானுகோடி கொடுப்பினுந்தன்னுடைநாக் கோடாமைகோடிபெறும்

வாதக்கோனாளையென்றான் வையக்கோன்பின்னையென்றான்
ஏதக்கோன்யாதேனு மில்லையென்றான் - ஓதக்கேள்
வாதக்கோன்சொல்லதிலும் வையக்கோன்சொல்லதிலும்
ஏதக்கோன்சொல்லே யினிது. ௪௪

சுற்றுங்கருங்குளவி சூரைத்தூறீயப்பேய்
எற்றுஞ்சுடுகா டிடுசணையின் - புற்றில்
வளர்ந்தமடற்பனைக்குள் வைத்ததேனுக்கும்
தளர்ந்தோர்க்கொன்றீயார் தனம். ௪௫

ஆர்த்தசபைநூற்றொருவ ராயிரத்தொன்றாம்புலவர்
வார்த்தைபதினா யிரத்தொருவர் - பூத்தமலர்த்
தண்டாமரைத்திருவே தாதாகோடிக்கொருவர்
உண்டாயினுண்டென் றறு. ௪௬

தண்டாமலீவது தாளாண்மைதண்டி
அடுத்தக்காலீவது வண்மை - அடுத்தடுத்துப்
பின்சென்றாலீவதுகாற் கூலிபின்சென்றும்
ஈயானெச்சம்போ லறு. ௪௭

உள்ளவழக்கிருக்க வூரார்பொதுவிருக்கத்
தள்ளிவழக்கதனைத் தான்பேசி - எள்ளளவும்
கைக்கூலிதான்வாங்குங் காலறுவான்றன்கிளையும்
எச்சமறுமென் றறு. ௪௮

வழக்குடையானிற்ப வலியானைக்கூடி
வழக்கையழிவழக்குச் செய்தோன் - வழக்கிழந்தோன்
சுற்றமுந்தானுந் தொடர்ந்தழுதகண்ணீரால்
எச்சமறுமென் றறு. ௪௯

வெண்பாவிருகாலிற் கல்லானைவெள்ளோலை
கண்பார்க்கக்கையா லெழுதானைப் - பெண்பாவி
பெற்றாளேபெற்றாள் பிறர்நகைக்கப்பெற்றாளே
எற்றேமற்றெற்றேமற் றெற்று. ௫௰

கருங்குளவிசூரைத்தூ றீச்சங்கனிபோல்
வருந்தினர்க்கொன்றீயாதான் வாழ்க்கை - அரும்பகலே
இசைத்திருந்தபொருள் தாயத்தார்கொள்வாரே
எற்றேயற்றெற்றேயற் றெற்று. ௫௧

வானமுளதான் மழையுளதான் மண்ணுலகிற்
றானமுளதாற் றவமுளதால்-ஆனபொழு
தெய்த்தோமிளைத்தோமென் றேமாந்திருப்போரை
யெற்றேமற் றெற்றேமற் றெற்று. ௬௨

எண்ணாயிரத்தாண்டு நீரிற்கிடந்தாலும்
உண்ணீரம்பற்றாக் கிடையேபோற்-பெண்ணாவாய்
பொற்றொடிமாதர் புணர்முலைமேற்சாராரை
யெற்றேமற்றெற்றேமற் றெற்று. ௬௩

கருங்காலிக்கட்டைக்கு நாணாக்கோடாலி
இருங்கதலித்தண்டுக்கு நாணும்-பெருங்கானிற்
காரெருமைமேய்க்கின்ற காளைக்குநாண்டோற்ற
நீரவத்துஞ்சாதென் கண். ௬௪

கொடியது.

கொடியதுகேட்கி னெடியவெவ்வேலோய்
கொடிதுகொடிது வறுமைகொடிது
அதனினுங்கொடிது இளமையில்வறுமை
அதனினுங்கொடிது ஆற்றொணாக்கொடுநோய்
அதனினுங்கொடிது அன்பிலாப்பெண்டிர்
அதனினுங்கொடிது
இன்புறவவர்கையி லுண்பதுதானே. ௬௫

இனியது.

இனியதுகேட்கிற் றனிநெடுவேலோய்
இனிதினிது ஏகாந்தமினிது
அதனினுமினிது ஆதியைத்தொழுதல்
அதனினுமினிது அறிவினர்ச்சேர்தல்
அதனினுமினிது அறிவுள்ளாரைக்
கனவிலுநனவிலுங் காண்பதுதானே. ௬௬

பெரியது,

பெரியதுகேட்கி னெறிதவழ்வேலோய்
பெரிதுபெரிது புவனம்பெரிது
புவனமோநான் முகன்படைப்பு
நான்முகன்கரியமா லுந்திவந்தோன்
கரியமாலோ வலைகடற்றுயின்றோன்
அலைகடல்குறுமுனி யங்கையிலடக்கம்
குறுமுனியோ கலசத்திற்பிறந்தோன்
கலசமோ புவியிற்சிறுமண்

புவியோ வரவினுக் கொருதலைப்பாரம்
அரவோ வுமையவள் சிறுவிரன்மோதிரம்
உமையோ விறைவர் பாகத்தொடுக்கம்
இறைவரோ தொண்ட ருள்ளத்தொடுக்கம்
தொண்டர்தப் பெருமை சொல்லவும்பெரிதே. ௮௭

அரியது.

அரியதுகேட்கின் வரிவடிவேலோய்
அரிதரிதுமானிட ராதலரிது
மானிடராயினுங் கூன்குருடுசெவிடு
பேடுநீக்கிப் பிறத்தலரிது
பேடுநீக்கிப் பிறந்தகாலையும்
ஞானமுங்கல்வியு நயத்தலரிது
ஞானமுங்கல்வியு நயந்தகாலையும்
தானமுந்தவமுந் தான்செயலரிது
தானமுந்தவமுந் தான்செய்வாராயின்
வானவர்நாடு வழிதிறந்திடுமே. ௮௮

மாடில்லான்வாழ்வு மதியில்லான்வாணிபமுங்
கோடில்லான்செங்கோ னடாத்துவது-கூடுங்
குருவில்லாவித்தை குணமில்லாப்பெண்டு
விருந்தில்லான்வீடும் விழல். ௮௯

சேனைக்காணவிடத்தே நெஞ்சாரவேதுதித்தல்
ஆசானையெவ்விடத்து மப்படியே-வாச
மனையாளைப்பஞ்சணையின் மைந்தர்தமைநெஞ்சில்
வினையாளைவேலை முடிவில். ௯0

அலைப்பாலாவாக்க லாமோ ரவருஞ்சுணங்கன்
வாலைநிமிர்க்க வசமாமோ-நீலநிறக்
காக்கைதனைப்பேசுவிக்க லாமோகருணையிலா
மூர்க்கனைச்சீராக்க லாமோ. ௯௧

நிழலருமைவெய்யிலிலே நின்றறிமினீசன்
கழலருமைவெவ்வினையிற் காண்மின்-பழகுதமிழ்ச்
சொல்லருமைநாலிரண்டிற் சோமன்கொடையருமை
புல்லரிடத்தேயறிமின் போய். ௯௨

சாகினியிற்பிள்ளைக் கவிக்கப்புலிபுலியாம்
பேசுமுலாவிற் பெதும்பைபுலி-ஆசு
கலவர்க்குவண்ணம் புலியாமற்றெல்லாப்
புலவர்க்குவெண்பா புலி. ௯௩

ஈதலறந்தீவினைவிட் டீட்டல்பொருளெஞ்ஞான்றுங்
காதலிருவர் கருத்தொருமித்-தாதரவு
பட்டதேயின்பம் பரனைநினைந்திம்மூன்றும்
விட்டதேபேரின்ப வீடு ௬௪

தாயோடறுசுவைபோந் தந்தையொடுகல்விபோம்
சேயோடுதான்பெற்ற செல்வம்போம்-ஆயவாழ்
வுற்றாருடன்போ முடன்பிறப்பாற்றோள்வலிபோம்
பொற்றாலியோடெவையும் போம். ௬௫

போந்தவுதாரனுக்குப் பொன்றுரும்பு சூரனுக்குச்
சேர்ந்தமரணஞ் சிறுதுரும்பு-ஆய்ந்த
அறிவோர்க்குநாரி யருந்துரும்பாமில்லத்
துறவிக்குவேந்தன் றுரும்பு. ௬௬

மேற்பார்க்கமைந்தருண் மூவாவெருதாம்விளங்குகங்கை
நீர்ப்பாய்ச்சலூநன் னிலமுமுண்டாகியு-நின்னிடத்திற்
பாற்பாக்கியமதி நீங்காதிருந்தும்பலிக்குழன்றீர்
ஏற்பார்க்கிடாமலன்றோ பெருங்கோவிலிறையவனே. ௬௭

அகவல்.

மூவர்கோவையு மூவிளங்கோவையும்
பாடியவென்றன் பனுவல்வாயால்
என்னையும்பாடுக வென்றனனெயினனும்
படுதுயராக்க ளிறுபடுசெங்களங்
கண்ணிற்காணீர் வெளிறுபடுகல்யாழ்
விருப்பமாய்க்கேளீர்
இலைவாய்ச்சிய ரிளமுலைபுல்லீர்
புலவர்வாய்ச்சொற் புலப்பனுக்கிரங்கிலீர்
ஊடு நண்ணீர் கோடூர்கொள்ளீர்
ஓலாக்கானத் துயர்பாரப்போலத்
தாலாக்கனியிற் றோன்றினீரே. ௬௮

கல்வியுடையீர் கருங்கானகத்திடையே
செல்வியிலையுதிர்ந்து நிற்பதெவன்-வல்லாய்கேள்
வெல்லாவழக்கை விலைவாங்கிவெல்விக்கும்
வல்லாளன்சுற்றம்போன் மாண்டு. ௬௯

வண்டமிழைத்தேர்ந்த வழுதிசவியானைத்
துண்டப்பெருக்க முளைக்கக்கேள்-அண்டி

நெருக்குண்டேன் றள்ளுண்டே னீள்பசியினாலே
சுருக்குண்டேன் சோறுண்டிலேன். ௰

ஆகச்செய்யுள்-௨௨௯.

ஔவையார்முதலியஎழுவரும்பாடியது.

ஔவையார்.

இட்டமுடனென்றலையி லின்னபடியென்றெழுதி
விட்டசிவனுஞ்செத்து விட்டானோ-முட்டமுட்டப்
பஞ்சமேயானாலும் பாரமவனுக்கன்றோ
நெஞ்சமேயஞ்சாதே நீ. ௧

உப்பை.

அத்திமுதலெறும்பீ றானவுயிரத்தனைக்குஞ்
சித்தமகிழ்ந்தளிக்குந் தேசிகன்-முற்றவே
கற்பித்தான்போனானோ காக்கக்கடனிலையோ
வற்பனோவன்னா யான். ௨

அதிகமான்.

கருப்பைக்குண்முட்டைக்குங் கல்லினுட்டேரைக்கும்
விருப்புற்றமுதளிக்கு மெய்யன்-உருப்பெற்றால்
ஊட்டிவளர்க்கானோ வோகெடுவாயன்னாய்கேள்
வாட்டமுனக்கேன் மகிழ். ௩

உறுவை.

சண்டைப்பைக்குள்ளுயிர் தன்றாயருந்தத்தானருந்தும்
அண்டத்துயிர்பிழைப்ப தாச்சரியம்-மண்டி
அலைகின்றவன்னா யானுடையவுண்மை
நிலைகண்டுநீயறிந்து நில். ௪

கபிலர்.

கண்ணுழையாக்காட்டிற் கருங்கற்றவளைக்கும்
உண்ணும்படியறிந் தூட்டுமவர்-நண்ணும்
நமக்கும்படியளப்பார் நாரியோர்பாகர்
தமக்குத்தொழிலென்ன தான். ௫

வள்ளியம்மை.

அன்னைவயிற்றி லருத்திவளர்த்தவன்றான்
இன்னும்வளர்க்கானோ வென்றாயே-மின்னாருஞ்
சூடும்பெருமான் சுடுகாட்டினின்றுவினை
ஆடும்பெருமா னவன். ௬

வேழமுடைத்து மலைநாடு மேதக்கச்
சோழவளநாடு சோறுடைத்து-பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து தெண்ணீர்வயற்றொண்டை
நன்னாடு சான்றோருடைத்து. ௭

தெய்வப்புலமைத்

## திருவள்ளுவநாயனார்

அவ்வவ்வமயங்களிற்கூறிய தனிப்பாடற்றிரட்டு.

---

எவ்வுயிருங் காக்கவொரு வீசனுண் டோவில்லையோ
அவ்வுயிரில் யானொருவ னல்லனோ-வவ்வி
அருகுவது கொண்டிங் கலைவதேனன்னே
வருகுவது தானே வரும். ௮

பூவிலயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவியளந்தோனுந் தாமிருக்க-நாவில்
இழைநக்கி நூனெருடு மேழையறிவேனோ
குழைநக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து. ௯

ஐயவென்றுணர்த்தீர் நாயேற் கடுக்குமோ வருளிலேனைப்
பொய்யொடு களவு மற்றுப் புலன்களை யொடுக்கிக்கொண்டு
உய்யவே புலன்களைந்து முயர்பர வெளியுள்ளாக்கி
மெய்யவன் மதியும்போல விரவுவை யாராவர். ௰

ஞானமென்று சொன்னீர் நாதவிந்துங் கடந்து
கானலைவனாயுங் கூட்டிக் கடுவெளி பரமானந்தந்
தானெனுமவை யிரண்டுந் தவிர்த்துத் தன்வசமுங் கெட்டு
மோனமுங் கடந்தே யப்பால் முடிந்தவர் ஞானியாவர். ௧௧

சாதியிலே தொண்ணூற்றொன்பானுஞ் சாதி
சமயத்திற் பதின்மூன்றுஞ் சமயமாகும்
நீதியிலே சிவனுடைய நீதியாகும்
நிலைமையிலே வேதாந்த நிலைமையாகும்
ஆதியிலே யெங்களோர் கருவூராகும்
அந்தத்திற் போயடைவோம் பேரூர்தன்னிற்
சோதியிலே பரஞ்சோதிக் கூட்டமாகுஞ்
சொல்லுதற்கு மெங்கள் குலஞ் சுக்கிலமதாமே. ௧௨

எந்தவூரென்றீ ரிருந்தவூர் நீர்கேளீர்
அந்தவூர்ச் செய்தி யறியீரோ-வந்தவூர்

முப்பாழும்பாழாய் முடிவிலொருசூனியமாய்
அப்பாலும்பாழென் றறி. ௧௩

நில்லுநில்லென்றுசொன்னீர் நேசபாசங்களொன்றும்
பல்லறிவோதிவொங்காப் புலைகொலைகளவுமற்றுச்
சொல்லுதற்கரியஞானச் சுழிமுனைமுடியின்மீதில்
எல்லையுங்கடந்தேயப்பா லேகபாசவர்களிற்பார். ௧௪

இருமிருமென்றுசொன்னீ ரேற்குமோவேழையேற்குத்
தருமொருநெணர்ந்துசைவ சமயமுமனைத்துநீங்கி
மருட்டருவினையுநீங்கி மாசிலாவுண்மைஞானம்
பொருந்திமேயிருப்பர்பின்பு பொருதவிறப்பர்தாமே. ௧௫

போமெனவுரைத்தீரென்னைப் பொறியொடுபுலன்களைந்தும்
ஆமெனுமவிச்சையோடு மங்ஙனேமதித்துக்கொண்டே
ஏமமுஞ்சாமமற்றே யிரவொடுபகலுமற்றுச்
சோமனார்பதியைவிட்டுத் தூரந்தவர்போவரன்றே. ௧௬

அடிசிற்கினியாளே யன்புடையாளே
படிசொற்றவறாத பாவாய்-அடிவருடிப்
பின்றூங்கிமுன்னெழுந்த பேதையேபோதியோ
என்றூங்குமென்கண் ணிரா. ௧௭

ஆகச்செய்யுள்-௨௪௫.

---

## மகாகவியாகியகம்பர்

### அவ்வவ்வமயங்களிற்கூறியதனிப்பாடற்றிரட்டு.

கடல்கிழக்குத்தெற்குக் கரைபொருவெள்ளாறு
குடதிசையிற்கோட்டைக் கரையாம்—வடதிசையில்
ஏனாட்டுப்பண்ணை யிருபத்துநாற்காதஞ்
சோணாட்டுக்கெல்லையெனச்சொல். ௧

வெள்ளாறதுவடக்காம் மேற்குப்பெருவழியாந்
தெள்ளார்புனற்கன்னி தெற்காகும்—உள்ளார
ஆண்டகடல்கிழக்கா மைம்பத்தாறுகாதம்
பாண்டிநாட்டெல்லைப் பதி. ௨

வடக்குத்திசைபழனி வான்கீழ்தென்காசி
குடக்குத்திசைகோழிக் கோடாம்—கடற்கரையின்

ஓரமோ தெற்காறு முள்ளெண் பதின்காதம்
சோணாட் டெல்லையெனச் செப்பு. ௩

மேற்குப்பவளமலை வேங்கடநேர்வடக்காம்
ஆர்க்குமுவரி யணிகிழக்கு-பார்க்குளுயர்
தெற்குப்பினாகி திகழிருபதின்காதம்
நற்றொண்டநாடெனவே நாட்டு. ௪

ஆழியான்பள்ளியணையே யவன்கடைந்த
வாழிவரையின் மணித்தாம்பே-பூழியான்
பூணேபுரமெரித்த பொற்சிலையிற்பூட்டுகின்ற
நாணேயசல நட. ௫

மங்கையொருபங்கர் மணிமார்பிலாரமே
பொங்குகடல்கடைந்த பொற்கயிறே-இங்களையும்
சிறியதன்மேலூருந் தெய்வத்திருநாணே
ஏறியபண்பே யிறங்கு. ௬

பாரைச்சுமந்தபடவரவே பங்கயக்கண்
வீரன்கிடந்துறங்கு மெல்லணையே-ஈரமதிச்
செஞ்சடையான்பூணுந் திருவாபரணமே
நஞ்சடையாய்தூர நட. ௭

சிரம்பார்த்தானீசனயன் றேவிதனைப்பார்த்தான்
கரம்பார்த்தான்செங்கமலக் கண்ணன்-உரஞ்சேர்
மலைவெருத்ததிண்புயத்து வண்ணன்சீராமன்
கலைவெருத்தநேர்த்திதனைக் கண்டு. ௮

ஆரார்தலைவணங்கா ராரார்தான்கையெடார்
ஆரார்தான்சத்திரத்தி லாராதார்-சீராருந்
தென்புலியூர்மேவுஞ் சிவனருள்சேரம்பட்டத்
தம்பிபுகான்வாசலிலேதான். ௯

கொற்கையான்மாறன் குலசேகரப்பெருமான்
பொற்கையானகதை போதாதோ-நற்கமல
மன்றலைவாரி மணிவாசலையசைக்கத்
தென்றலேயென்வந்தாய் செப்பு. ௰

பேரரசர்தேவிமார் பெற்றபதலையர்தம்
மார்பகலங்கண்டு மகிழ்வரே-போர்புரிய
வல்லானகளங்கன் வாணன்றிருநாமம்
எல்லாமெழுதலா மென்று. ௧௧

உலக்குரியபண்ட முவந்திரக்கச்சென்றால்
கொலைக்குரியவேழங் கொடுத்தான்-மலைக்குரிய
வாணர்கோனறை மகதேவனுக்கிந்தப்
பாணனோடென்ன பகை, ௧௨

வாணன்பெயரெழுதா மார்புண்டோமாகநர்கோன்
வாணன்புகழெழுதா வாயுண்டோ-வாணன்
கொடிதாங்கிநில்லாத கொப்புண்டோவுண்டோ
அடிதாங்கிநில்லா வரசு, ௧௩

உமையவளொருநீயு மொருக்கொப்பேயொப்பே
உமையவளுக்குண்டங் கோருணம்-உமையவடன்
பாகத்தாய்ந்தாண்டான் பலிக்குழன்றான்பாண்டியநின்
ஆகந்தோய்ந்தாண்டானரசு. ௧௪

மோட்டெருமைவாவிபுக முட்டுவராற்கன்றென்று
வீட்டளவும்பால்சொரியும் வெண்ணெயே-நாட்டில்
அடையாநெடுங்கதவு மஞ்சலென்றசொல்லும்
உடையான்சடையப்ப னூர். ௧௫

வெற்றிபுனைதாதகிக்கும் வேம்புக்கும்பெண்ணைக்கும்
சுற்றும்பெருநிழலாய்த்-தோன்றுமே-கற்றோர்
திறந்தாங்குந்தாங்குஞ் செகமுழுதுந்தாங்கும்
அறந்தாங்குந்தொண்ட வரசு. ௧௬

கந்தமலர்ப்பிரமன் கன்னிமடவார்க்கெல்லாம்
அந்தவிளநீரைமுலை யாக்கினான்-சுந்தரஞ்சேர்
தோற்றமிகுவல்லிக்குத் தோப்பைமுலையாக்கினான்
ஏற்றமிதிலையார்தா னியம்பு. ௧௭

இருந்தவளைப்போனவளை யென்னையவளைப்
பொருந்தவளைபறித்துப் போனான்-பெருந்தவளை
பூத்தத்தத்தேன்சொரியும் பொன்னிவளநன்னாட்டின்
மாத்தத்தன்வீதியினில் வந்து. ௧௮

ஆழிபானாழியய னெழுத்தாணியென்பார்
கோழியான்குன்றெறிய வேலென்பான்-பூழியான்
அன்னைநமழுவென்பா னருள்பெரியமாவண்டூர்ச்
சிங்கனுலைக்களத்திற் சென்று. ௧௯

குடகர்குணகட லென்பர்குடகுக்
கிடகாவடகட லென்பர்-வடகடலோர்
தென்கடலென்பர் இருந்துகாச்சுதநின்
முன்கடைநின்றார்க்கு முரசு. ௨௰

திணைவிளைத்தார் முற்றந் தினையுணங்குஞ் செந்நெ
றனைவிளைத்தார் முற்றமது தானாங்-கனைய
முரசுணங்கச் சங்குணங்கு மூரித்தேர்த் தானை
அரசுணங்கு மச்சுதன் முற்றம். ௨௧

குறையுளா ரெங்கிரார் கூர்வேலிராம
னிறையாறு திங்க ளிருந்தான்-முறைமையால்
ஆலிந்துந் தார்மார்பா வச்சுதா வந்நாளில்
வாலிக்கிளையான் கடை. ௨௨

அரசனகளங்க னச்சுதன் முற்றத்
தரசபவதரித்த வந்நாள்-முரசதிரக்
கொட்டிவிடுமோசையினுஞ் சேரவேந்தர்காற்றளையை
வெட்டிவிடுமோசை மிகும். ௨௩

தளையவிழ்நாண் மாலைத் தாயரேயாவி
களையினுமென் கண்டிறந்து கட்டேன்-வளைகொடுபோம்
வண்டுண்ணாண் மாலிசையன் மால்யானை தன்னொடும்வந்
தெங்கண் புகுந்தா னினி. ௨௪

பாண்டியனைப்பேர்மாற்றிப் பாணர்க்கரசளித்த
வாண்டகையென்றுன்னை யறியேனோ-மூண்டெழுந்த
கார்மாற்றுஞ் செங்கைக் கடகரிவாணவுனது
பேர்மாற்றுவதரிதோ பேசு. ௨௫

வாட்டானைத் தென்னவர்கோன் மாகதற்குத் தோற்றசெய்தி
கேட்டானத் திக்கூறும் கேட்டதற்பின்-னாட்டம்
பொருந்தாயிர விழியான் பொன்முடியைச் சாய்த்தங்
கிருந்தானிங் கென்னாகு மென்று. ௨௬

பாணன்மதுரைப் பதியாளவைத்தபிரான்
வாணர்புகழ்வரு மேகம்ப-வாணன்
கரும்போதகமேறின் கால்பணிவேன் மீண்டு
வரும்போதகமே வரின். ௨௭

பசிபருந்துஞ் சூர்ப்பேயும் பன்மிருகஞ் செந்நாய்
கொடுகழுகுமித்தனையுங் கூடி-வடிவுடைய
கோமான்களப்பாளன் கொள்யானைபோமாறு
போமாறுபோமாறு போம். ௨௮

என்கிளிகையென்கவிகை யென்றுவசமென்கவசம்
எமன்பரியி தென்கரியி தென்பரோ-மன்கவன
மாவேந்தன்வாணன் வரிசைபரிசுபெற்ற
பாவேந்தரைவேந்தர் பார்த்து. ௨௯

சேற்றுக்கமலவயற் றென்றஞ்சைவாணனையான்
சோற்றுக்கரிசிதரச் சொன்னக்கால்-வேற்றுக்
களிக்குமாவைத்தந்தான் கற்றவர்க்குச்செம்பொன்
அளிக்குமாறெவ்வா றவன். ௩௰

தேருருளைப்புரவிவாரணத்தொகுதி திறைகொணர்ந்துவருமன்னநின்
தேசமேதுனதுநாமமேதுபுகல் செங்கையாழ்தடவுபாணகேள்
வாருமொத்தகுடிநீருநாமு மகதேவனுறைநகர்காவலன்
வாணபூபதிமகிழ்ந்தளிக்கவெகு வரிசைபெற்றுவருபுலவன்யான்
நீருமிப்பரிசுபெற்றுமீளவர லாகுமேகுமவன்முன்றில்வாய்
நித்திலச்சிகரமாடமாளிகை நெருங்குகோபுரமருங்கெலாம்
ஆருநிற்குமுயர்வேப்புநிற்கும்வளர் பனையுநிற்குமதனருகிலே
அரசுநிற்குமரசைச்சுமந்தசில வத்திநிற்குமடையாளமே. ௩௧

அலங்கலணிமார்ப னுறையர்கோன்வாணன்
விலங்குகொடுவருக வென்றான்-இலங்கிழையீர்
சேரர்க்கோசோழர்க்கோ தென்பாண்டிநாடாளும்
வீரர்க்கோயார்க்கோ விலங்கு. ௩௨

பரப்போதகூலமொருகர்பிளப்பனிமதியக்
தூரப்போனொருதம்பிபின்வரத்தானுந்துணைவியுடன்
வரப்போனவைந்தற்குத்தாதைபொருதுயிர்மாய்ந்தனனென்
றுரைப்போனெனக்கினியாருவமையுரைப்பதற்கே. ௩௩

கண்டாயோபார்வேந்தா கானகத்துக்கள்ளியின்கீழ்
வெண்டாழைபூத்து விளக்கெரிய-பெண்டாலி
பூட்டுதற்குமுன்னமொரு புத்திரனைப்பெற்றெடுத்தாள்
காட்டிற்கழுகோட்டுங் கை. ௩௪

கன்னிக்கலசமுலைபாடல்காமக்குரோதபஞ்சத்தில்
என்னுக்கெழுதிக்கொடுத்தேனென்றியம்பக்கேளாயிகல்வேந்தே
மின்னுக்கெழுதியிடைக்கெழுதிவெண்டும்பொருட்குமெழுதியருட்[ டே
பொன்னுக்கெழுதிக் கொடுத்தேன்யான் பொய்யுரையேன்புகல்வேந்

பாண்டியன்பாடியது.

போற்றினும் போற்றுவர் பொருள்கொடாவிடிற்
றூற்றினுந் தூற்றுவர் சொன்னசொற்களை
மாற்றினுமாற்றுவர் வன்கணாளர்கள்
கூற்றினும்பாவலர் கொடியராவரே. ௩௬

மன்னவனுநீயோ வளநாடுமுன்னதோ
உன்னையறிந்தோ தமிழையோதினேன்-என்னை
விரைந்தேற்றுக்கொள்ளாத வேந்துண்டோவுண்டோ
குரங்கேற்றுக்கொள்ளாத கொப்பு. ௩௭

அன்றையிலுமையைய மகன்றதோவல்லவென்று
குன்றெடுத்துநீதிருத்திக் கொண்டாயோ—என்றும்
அடைந்தாரைக்காக்கு மகளங்கா துங்கா
நடந்தாயேநாலா றடி. ௩௮

காதமிருபதுநான் கொழியக்காசினியை
ஓதக்கடல்கொண் டொளித்ததோ—மேதினியிற்
கொல்லிமலைதேன்சொரியுங் கொற்றவாநீமுனிந்தால்
இல்லையோவெங்கட் கிடம். ௩௯

நீலஞ்செற்றுநாற்ற நிலமெல்லாங்கல்லுமுள்ளும்
ஊரெலாம்பட்டிதொட்டி யுண்பதோகம்பஞ்சோறு
பேரெலாம்பொம்மன்றிம்மன் பெண்களோநாயும்பேயும்
காருலாங்கொங்குநாட்டை கனவிலும்நினைக்கொணாதே. ௪௰

குமிண்டியும்பண்ணையுங்கூடவுழைக்கின்றகொல்லைக்கம்பை
நிமிண்டியுமூதியுமுன்னவல்லோரிக்கநீணிலத்திற்
றுமிண்டியர்சாய்தன்னைமொட்டையம்மாவெய்யுஞ்சூர்கண்டீர்
கமிண்டியிற்பள்ளிகளத்தனைபேர்களுநல்லவரே. ௪௧

செட்டிமக்கள்வாசல்வழிச் செல்லோமேசெக்காரப்
பொட்டிமக்கள்வாசல்வழிப் போகோமே—முட்டிபுகும்
பார்ப்பாரகத்தையெட்டிப் பாரோமேயெந்நாளுங்
காப்பாரேவேளாளர் காண். ௪௨

மேழிபிடிக்குங்கை வேல்வேந்தர்நோக்குங்கை
ஆழிதரித்தே யருளுங்கை-சூழ்வினையை
நீக்குங்கையென்று நிலைக்குங்கைநீடூழி
காக்குங்கைகாராளர் கை. ௪௩

மற்கொண்ட திண்புயத்தான் மாநகர்விட்டிங்குவந்து
சொற்கொண்ட பாவின் சுவையறிவாரீங்கிலையே
விற்கொண்ட வாணுதலாள் வேலிசருங்கூலி
நெற்கொண்டுபோமளவு நில்லாய்நெடுஞ்சுவரே. ௪௪

விருத்தம்.

தேனையார்செவ்விளநீ ருண்ணப்பழிசுமப்பர்
நரியார்தாமறிவார் நாமவனைநத்தாமை
கோனைவாய்ப்பொன்சொரியுங் கொல்லிமலைநன்னாடர்
ஊனைவாய்மூட வுலைமூடிதானிலையே. ௪௫

மட்டுப்படாக்கொங்கை மானார்கலவிமயக்கத்திலே
கட்டுப்பட்டாயென்ன காதல்பெற்றாய்மதன்கையம்பினாற்
பட்டுப்பட்டாயினுந் தேறுவையேயென்றுபார்த்திருந்தேன்
வெட்டுப்பட்டாய்மகனே தலைநாளின்விதிப்படியே. ௪௬

வில்லம்புசொல்லம்பு மேதினியிலீரண்டில்
வில்லம்பிற்சொல்லம்பே மேலதிகம்-வில்லம்பு
பட்டதடாவென்மார்பிற் பாண்டியாநின்குலத்தைச்
சுட்டதடாவென்வாயிற் சொல். ௪௭

களக்குவடக்கிருக்குங் காளிகாளம்மைக்
களைத்துவழிசாங்கைத் தொட்டப்பேய்-உளைத்தும்
மறைக்கவழியறியாத வன்பேயின்கையைக்
குறைக்குமாங்கூன்கத்தி கொண்டு. ௪௮

காலப்புயனிகர்காராளர்தம்மைக்கடலுடுத்த
தாலக்குலமங்கைபெற்றதனாற்சதாகாலமும்பால்
கோலத்திருமுகத்தாலேமுகந்தனன்கூடலிலே
சூலக்காப்படையான்றலைமீதுசுமந்தனனே. ௪௯

கல்லெஞ்சாடுதனில்விளையாக்கடுகநிலத்திற்றூன்றுவளைய
அல்லனிருந்தகருங்கூந்தலணங்குக்கணங்குபோலாவாள்
செல்லன்றேவியனைகட்டாறுந் தேடித்திருந்துங்காணுதே
நெல்லஞ்சோறேகப்பஞ்சோற்றினைசுமந்துதிரிவாயே. ௫௰

கம்பர்கற்றச்சொல்லி.

மாவுறங்கினபுள்ளுறங்கினவண்டுறங்கினதண்டலைக்
காவுறங்கினவெண்கண்மானிருகண்ணுறங்கிலையேசோ
கோவுறங்குகடைத்தலைக்குதைபவள்ளைகுதட்டிவாய்
ஆவுறங்குபசாசஞ்சலமஞ்சலென்னவடிக்குமே. ௫௧

### அம்பிகாபதியும் கம்பரும்பாடியது.

இட்டடிநோவ வெடுத்தடிகொப்புளிக்க
வட்டில்சுமந்து மருங்கசையக்-கொட்டிக்
கிழங்கோகிழங்கென்று கூறுவாணாவில்
வழங்கோசையைவையம் பெறும். ௫௨

### அம்பிகாபதி.

சற்றேபருத்ததனமேகுலுங்கத்தரளவடஞ்
சுற்றேயசையக்குழையூசலாடத்துவர்கொள்செவ்வாய்
நற்றேனொழுகநடனசிங்காரநடையழகின்
பொற்றேரிருக்கத்தலையலங்காரம்புறப்பட்டதே. ௫௩

வெங்கண்சிவந்துவெடிவான்முறுக்கிவெகுண்டெழுந்தென்
அங்கம்பிளக்கவருஞ்சனியேயன்றிரணியனைப்
பங்கப்படவுரங்கீண்டேயுதிரம்பருகுநர
சிங்கமிருக்குதுகாண்கெடுவாயென்றன்சிந்தையிலே. ௫௪

வீரமுண்டோபதஞ்சையப்பிறல்வெந்துவிழுகைக்கு
நேரமுண்டோவஞ்சிநேர்பட்டகாலையினெஞ்சைவிடப்
போமுண்டோசொலவொண்ணுதகாமப்பெருநெருப்புக்
கீரமுண்டோவைபனேயென்னபாவமினிச்சொல்வதே. ௫௫

உருகியுடல்கருகி யுள்ளீரல்பற்றி
எரிவதவியாதென் செய்வேன்-வரியரவ
நஞ்சிலேதோய்ந்த நளினவிழிப்பெண்பெருமாள்
நெஞ்சிலேயிட்ட நெருப்பு. ௫௬

வாணன்புகழ்க்கெல்லை வாழ்த்துவோர்க்கெல்லை
வாணன்புகழ்க்கெல்லை மண்ணெல்லை-வாணன்
படைக்கெல்லைதிக்கெல்லை பைந்தமிழ்தேர்வாணன்
கொடைக்கெல்லையேற்பவர்தங் கோள். ௫௭

நில்லாதபல்லும்பறிபட்டகூந்தலுநீண்டசுரிப்
பொல்லாவழுக்குப்புடைவையுமாய்வெகுபூச்சியம்போய்ச்
செல்லாப்பணத்துக்குத்தேட்டனுமற்றுத்தியங்கியொன்றும்
இல்லாதபாவிதனக்கார்துணைபொன்னிராட்டினமே. ௫௮

வாசமலர்மடந்தை போல்வார்மருதவணத்
தீசனடியா ரெழுபதின்பர்-நேசத்

இவ்வலர்மேனீட்டுவார்கை யின்றிலைநயாரும்
புரவலர்மேனீட்டுவர் பொற்றூள். ௫௯

இடைக்காடர்பாடியஊசிமுறி.

ஆற்றங்கரையி னருகிருக்குமரமத்திற்
காக்கையிருந்து கஃறுகஃறெனக்-காக்கைதனை
எய்பக்கோலில்லாமல் இச்சிச்செனவெய்தான்
வையைக்கோனின் மகன். ௬௰

ஏகம்பவாணன்மனைவி.

சேனைதழையாக்கிச் செங்குருதிநீர்தேக்கி
ஆனைமிதித்தவருஞ்சேற்றின்-மானபரன்
பாவேந்தர்வேந்தன் பறித்துநட்டானேகம்பன்
மூவேந்தர்தங்கள் முடி. ௬௧

கம்பர்வீட்டு வெள்ளாட்டி.

தெற்படிவிளைமுனிபுடைசூழ்தென்மலிவாழ்தச்சன்
கற்படிபனைதோளான் பெயரோகங்கணகணகணவன்
விற்படிவாணுதலாண்மனைவிமின்மினிமினிமினிமி
சொற்படிவேலைசெயும்மவளோதுந்துமிதுரிதுரிதி. ௬௨

வட்டமதிபோனிருக்கும் வன்னிக்கொடிதாவுங்
கொட்டுவார்கையினின்று கூத்தாடும்-கட்டால்
அகாரவென்னுமே யம்பலசோமாசி
ஒருநாள்விட்டேனீ துரை. ௬௩

தென்னவாமீனவா சீவிலிமாறமதுரை
மன்னவாபாண்டி வாராமா-துன்னுஞ்
சுரும்புக்குத்தாளித்த தூய்யதமிழ்நாடா
கரும்புக்குவேம்பிலை கண். ௬௪

மாப்பந்தார்க்கல்லமுத்து வண்ணத்தார்க்கல்லவஞ்சி
வேப்பந்தார்க்காசைகொண்டு விட்டாளே-பூப்பைந்தார்
சேர்ந்திருக்குநெல்வேலிச் சீவிலிமாறதமிழை
ஆர்க்கிருக்கும்வீரமாற. ௬௫

வேம்பாகிலுமினிய சொல்லுக்குறிபுனைந்த
வேம்பாகிலுமுதவ வேண்டாமோ-மீன்பாயும்
வேலையிலேவேலைவைத்த மீனவாநின்புயத்து
மாலையிலேயாலைவைத்தான் மான். ௬௬

இலகுபுகழாறை யேகம்பவாணன்
அலைசைவரும் வருமென் றஞ்சி-உலகறிய
வானவர்கோன்சென்னிமிசை வண்கைவளையெறிந்த
மீனவர்கோனுங்கைவிடான் வேம்பு. ௯௭

பாண்டியன்மனைவி.

வேண்டியபோதின்பம் விரும்புமடந்தையரைத்
தீண்டியகையாலென்னைத் தீண்டாதே பாண்டியா
முல்லைக்கதிபா முகம்பார்த்தகலநின்று
சொல்லக்கடவதெல்லாஞ் சொல். ௯௮

கலையான்முலைமுடிக் கண்வலைக்குள்ளாக்கும்
விலைமாதர்தாம்வரை விட்டாரோ-விலைமாதர்
கொங்கையிலேதோய்ந்த குறைதீரத்துய்யசிவ
கங்கையிலேயோடி வா. ௯௯

ஆக-செய்யுள்-௯௰௯.

---

இலக்கணக்கவிகளாகிய

ஒட்டக்கூத்தரும்புகழேந்திப்புலவரும.

அவ்வவ்விடயங்களிற்கூறிய தனிப்பாடற்றிரட்டு.

---

கலைவாணிநீயுலகிலிருப்பதுவுங்கல்வியுணர்கவிவல்லோரைத்
தலையாகக்காப்பதுவுமவர்நாவில்வாழ்வதுவுஞ்சத்தியமேயன்றோ
சிலைவாணனிராயிரம்புயக்களைந்துமுயர்சீவனுற்றான்
தலையாவிகொடுத்திசின்செங்குந்தருயிர்பெற்றிடநீதயைசெய்வாயே. (௧)

நிலைதந்தாருலகினுக்குமியாவருக்குமானமறைதநிலைக்கத்தந்தார்
கலைதந்தாரவணிகருக்குச்சீவனஞ்செய்திடவென்றேகையிற்றந்தார்
விலைதந்தார்தமிழினுக்குச்செங்குந்தரென்கவிக்கேவிலையாகத்தான்
தலைதந்தாரெனக்குமொட்டக்கூத்தனெனப்பெயரினையுந்தான்றந்தாரே,

பத்துக்கொண்டதிக்குப்பகறிப்போயலையப்
பைம்பொற்றாகைசிந்தப்பகிரண்டத்திடைநீள்
மத்துக்கொண்டுபதிக்குந்திரையாழிநெடுமால்
வடிவாகிப்புவிகைக்கொண்டருண்மாறுபாணு
முத்துப்பந்தரினிற்குந்தருளைக்குஞ்சினவேள்
முருகற்கும்பொதியைக்கோமுனிவற்குஞ்சடிலக்

௪௧ ஒட்டக்கூத்தரும் புகழேந்திப்புலவரும் பாடிய

ஒட்டக்கூத்தன்.

நானேயினியுனைவேண்டுவதில்லைநளினமலர்த்
தேனேகபாடந்திறந்திடுவாய்திறவாவிடிலோ
வானேறனையவிரவிதுலாதிபன்வாயில்வந்தாற்
றானேதிறக்குநின்கையிருமாகியதாமரையே. ௬௩

புகழேந்தி.

இழையொன்றிரண்டுவகிர்செய்தநுண்ணிடையேந்துவள்ளைக்
குழையொன்றிரண்டுவிழியணங்கேகொண்டகோபந்தணி
மழையொன்றிரண்டுகைமானாபரணன்வாயில்வந்தாற்
பிழையொன்றிரண்டுபொறுப்போர்குடியிற்பிறந்தவரே. ௰௪

ஒட்டக்கூத்தன்.

வெள்ளத்தடங்காச்சினவாளைவேலிகமுகின்மீதேறித்
துள்ளிமுகிலைக்கிழித்துமழைத்துளியோடிறங்குஞ்சோணாடா
கள்ளக்குறும்பர்குலமறுத்தகண்டாவண்டர்கோபாலா
பிள்ளைமதிகண்டம்பேதைபெரியமதியுமிழந்தாளே. ௰௮

ஔவையார்.

ஒட்டாவொருமதிகெட்டாய்.

புகழேந்தி.

பங்கப்பழனத்துழுமுழவர்பலவின்கனியைப்பறித்ததென்று
சங்கிட்டெறியக்குரங்கிளநீர்தனைக்கொண்டெறியுந்தமிழ்நாடா
கொங்கைக்கமராபதியளித்தகோவேராஜகுலதிலகா
வெங்கட்பிறைக்குங்கரும்பிறைக்கும் மெலிந்தபிறைக்கும்விழிவேலை

ஒட்டக்கூத்தன்.

புள்ளிருக்குந்தார்மார்பன் பூம்புகார்வாழ்வளியேம்
சுள்ளிருக்குங்கள்ளையுண்டு சோர்விலைப் - உள்ளபடி
சொல்லுவாவாலிதுரோபதையை மூக்கரிந்த
நல்லவாமா பாரதம். (வாலி- அரவக்கொடியையுடையதுரியோதனன்.) ()

என்றுபெறுவேன்யா னீசன்திருமுடிமேல்
சென்றுபிளையாநின்ற தீபமே - என்றும்
செருப்புக்குகதோல்வாங்குஞ் சென்னியர்களங்கன்
பொருப்புக்குத்தோலாப்புயம். (தோல்-யானை) உ௧

வேளாளன்.

கோக்கண்டுமன்னர்குடைகடற்புக்கிலர்கோகநதப்
பூக்கண்டுகொட்டியும்பூவாதொழிந்திலபூமுழுதாள்

பொழியும்பொழுதெங்கள்பெண்சக்ரவர்த்திமுகத்திரண்டு
விழியும்புருவமுமாகியந்தோவினைவெல்கின்றதே. ௨௯

திக்குளெட்டுக்கயந்தாக்கமுற்றுத்திடுக்கிட்டலற
மைக்கடற்றுட்சாந்தைக்கவிட்டோர்க்கிடமாமதுர
இக்குமுற்றிக்கணுச்சற்றுவிட்டுத்தெறித்திட்டமுத்தைக்
கொக்குமொக்கிவிக்கிக்கக்குமச்சோலைக்குறுங்குடியே. ௩௰

ஆகச்செய்யுள்—௩௰.

---

## கவிவீரராகவமுதலியார்.

தேன்பொழிந்தவாயான் றிருவேங்கடத்தானே
என்பிறந்தான் கண்ணுக் கினியானே-வான்சிறந்த
சீதேவியாருடனே செய்யதிருப்பாற்கடலில்
மூதேவியேன்பிறந்தாண் முன். (௧)

இம்பர்வானெல்லையிராமனையேபாடி
யென்கொணர்ந்தாய்பாணனீயென்றாள்பாணி
வம்பதாங்களபமென்றேன்பூசுமென்றாள்
மாதங்கமென்றேன்யாம்வாழ்ந்தேமென்றாள்
பம்புசீர்வேழமென்றேன்றின்னுமென்றாள்
பகடென்றேனுழுமென்றாள்பழனந்தன்னைக்
கம்பமாவென்றேனற்களியாமென்றாள்
கைம்மாவென்றேன்சும்மாகலங்கினாளே. ௨

இல்லெனுஞ்சொல்லறியாதசீதகையில்வாழ்தானைப்போல்யாழ்ப்பாணன்யான், பல்லைவிரித்திரந்தக்கால்வெண்சோறும்பழந்தூசும்பாலியாமற், சொல்லநினைந்தேதனதுநால்வாயைப்பரிசென்றுகொடுத்தான்பார்க்குள், தொல்லையெனதொருவாய்க்குநால்வாய்க்குமிரையெங்கேதேடப்போவேனே. ௩

முன்னாளிருவர்க்கும்யாக்கையொன்றாகமுயங்கினமால்
பின்னாட்பிரியன்விரியையென்றாயினம்பேசலுறும்
இந்நாட்கொழுநன்மனைவியென்றாயினமின்னமுமோர்
சின்னாளிலெப்படியோவையநீயின்றுசெப்புகவே. ௪

வாழுமிலங்கைக்கோ மானில்லைமானில்லை
ஏழுமராமரமோ வீங்கில்லை—ஆழி

அலைபடைத்தசெங்கை யபிராமாவின்று
சிலைமெலித்தவாறெமக்குச் செப்பு. ௫

செஞ்சுடரின்மைந்தனையுந் தென்னிலங்கைவேந்தனையும்
பஞ்சவரிற்பார்த்தனையும் பாராதே-விஞ்சு
விரதமேபூண்டிந்த மேதினியையாண்ட
பரதனையும்ராமனையும் பார். ௬

வடவைக்கனலைப்பிழிந்துகொண்டேற்றுமொருகால்வடித்தெடுத்து
வாடைத்துருத்திவைத்தூதிமறுகக்காய்ச்சிக்குழம்புசெய்து
புடவிக்கடவர்தமைப்பாடிப்பரிசுபெறுமற்றிருப்பிவரும் [னோ
புலவர்மனம்போற்சுடுநெருப்பைப்புழுகென்றிறைத்தார்பொறுப்பா
அடவிக்கதலிப்பசுங்குருத்தைநச்சுக்குழலென்றஞ்சியஞ்சி
அஞ்சொற்கிளிகள்பஞ்சரம்விட்டகலாநிற்குமகளங்கா
இடமுக்கடவாரணமுகைத்ததேவேதேவசிங்கமே
திக்குவிசயஞ்செலுத்திவருசெங்கோனடாத்துமெங்கோனே, ௭

மாதரணிமென்முலை தோய்மாராசிதம்பரபூ
மாதரணிபுகழ்மகிழ் மாவசண-மாதர்
மறுகிடத்தீயம்பொன் மடவார்பழிக்கநெஞ்சை
மறுகிடத்தேங்குந்துணைப்பெண் வா. ௮

சொல்லுமல்லும் பகலுஞ் சோறுங்கிடைகிடக்கும்
கல்லுமுருகக் கனிந்தாற்றும்-புல்லியனை
வின்கலந்தங்கீர்த்தி வேள்சிதம்பரக்குமார
பெண்கலக்கங்கொண்டுநின்றன் பேர். ௯

வந்தனந்தமென்பூ மணந்தோய்ந்துபாயப்பா
வந்தவம்பிப்பிச்சோர்ந்தாள் வாகோடி-வந்தனங்கல்
அன்னமனங்கொள்ளாம லாள்சிதம்பரக்குமார
அன்னமனங்கொண்டயவே யாங்கு. ௰

மாவாரிமுத்தவெண்பல் மாதுமயிலைத்தணிசேர்
மாவாரிமுத்தளித்த வைபோகா-மாவுச்
சிதம்பரவைபாரீ திக்குளுயாபூமா
சிதம்பரவைபாரீ திக்கு. ௧௧

பங்கஜமேல்மேவியசெள பாக்கியசுபமானளித்த
அங்கஜவேள்வெங்கணையா லாவிநொந்த-எங்களிட
மாஞ்சிதம்பரவு மாதிலையாஞ்சோடிநமஸ்
காஞ்சிதப்பாயோகா. ௧௨

இன்னாட்கலைமகள்கைசாத்திற்புத்தகமேந்தியந்தப்
பொன்னம்பலந்தனிற்புக்கிருந்தாளென்னபுண்ணியமோ
அன்னங்களாக்கைதக்கவிவீரராகவன்கச்சியிலே
தன்னெஞ்சப்பேடைனக்காற்றொருமுத்தமிழையுமே, ௪௩

முன்னாட்டுத்தவமுனியுஞ்சேடனும்வான்மீகனும்முன்னில்லாமற்
தென்னாட்டுமலையிடத்தும்பாரிடத்தும்புற்றிடத்துஞ்சென்றுசேர்ந்தார்
இந்நாட்டுப்புலவருனக்கெதிரிலையேகவிவீரராகவா நீ
பொன்னாட்டுப்புலவருடன்வாதுசெய்யப்போயினையோபுகலுவாயே. ௪௪

கோளமேவேந்துலகிலிந்தப்புதுமையுண்டோவெனமொழிக்குமுறைகே
யாளனைவந்தடைந்தோய்ந்தகற்புடையபாஞ்சாலியவனைந்தவிமன் [ளா
வாளரிபோலருகிருக்கமல்லவெற்பிலிருந்துவந்தமாமனைச்
சாளரவாசலைத்திறந்துவாவழைத்துமுலைபாரத்தழுவினாளே ௪௫

பணியாரந்தோசையிலக்கொங்கைசேர்ந்திடப்பார்ப்பர்பல்லி
பணியாரந்தோசையிலாச்செந்துவாய்ப்பிறப்பார்களென்றே
பணியாரந்தோசைமுன்னேனுக்கிட்டேத்திப்பழனிச்செவ்வேள்
பணியாரந்தோசைவராகாரன்றோர்க்கென்னபாவமிதே. ௪௬

வீரஞ்செறிகின்றபிள்ளாயுனக்குப்பெண்வேண்டுமென்றால்
ஆருங்கொடார்களப்பன்கபாலியம்மான்திருடன்
ஊருஞ்செங்கோட்டிநின்றனமுகம்பாரினையுனக்கிளையோன்
பேருங்கடம்பனுன்றுப்பீவிதிற்குப்பெருவயிறே. ௪௭

கட்டிச்சோற்றைப்பறிகொடுத்தபோதுபாடியது.

சோராடையற்றலைவன்வாகனஞ்சேவந்து
பாராருநான்முகன்வாகனந்தன்னைமுன்பற்றிக்கொளவி
நாராயணனுயர்வாகனமாயிற்றுநம்மைமுகம்
பாராண்மைவாகனன்வந்தெயிற்றினிற்பற்றினனே. ௪௮

மைவாகனன் - அக்கிதேவன்.

பாண்டியன்மாலைகண்டாய்பகைவேளினைப்பார்த்தவர்க்கு
வேண்டியவின்பமிகவருமோவெங்கணையேதிருகித்
தூண்டிக்குதித்தநற்கோதண்டராமன்றடவரைமேல்
ஆண்டியிருப்பிடந்தாதனிருப்பிடமானபின்னே. ௪௯

சேனையுங்காத்துநல்லானையுங்காத்தத்துரோபதைதன்
தானையுங்காத்தடைந்தானையுங்காத்துத்தடக்கரவி
மானையுங்காத்தனுமானையுங்காத்துமடுவில்விழும்
ஆனையுங்காத்தவன்சேயெனைக்காப்பதரிதல்லவே. ௫௰

பொய்யருக்குப்பொய்யுரைத்தால் வெற்றியாமவருக்குப்பொய்யாகாத,மெய்யருக்குப்பொய்யுரைத்தாற் றேய்பிறைபோற்றவன்குறையுபிடியுண்டாகும்,துய்யதாய்தந்தையர்க்குப்பொய்யுரைத்தால்வறுமைபிணிதொலையாதென்றும்,உய்யவருதேசிகர்க்குப் பொய்யுரைத்தானரகமதுவுண்மைதானே. ௨௧

ஆசச்செய்யுள்-௩௬௬

---

படிக்காசுத்தப் பிரான்.

அடகெடுவாய்பலதொழிலுமிருக்கக்கல்வி
யதிகமென்றேகற்றுவிட்டோமறிவில்லாமல்
திடமுளமோகனமாடக்கழைக்கூத்தாடச்
செப்பிடுவித்தைகளாடத்தெரிந்தோமில்லைத்
தடமுலைவேசையராகப்பிறந்தோமில்லைச்
சனியானதமிழைவிட்டுத்தையலார்தம்
இடமிருந்துகுற்றேவல்செய்தோமில்லை
என்னசென்மமெடுத்துலகிலிரக்கின்றோமே. ௧

பெற்றதொருபிள்ளையென்மனையாட்டியப்பிள்ளைக்குப்பால்
பற்றாதுசஞ்சிகுடிக்கத்தரமல்லபாலிரக்கச்
சிற்றூருமில்லையிவ்வெல்லாவருத்தமுந்தீரவொரு
சற்றுதரவல்லையாவல்லமாநகர்காளத்தியே. ௨

வழிமேல்விழிவைத்துவாடாமலென்மனையாளுநற்றோர்
பழியாமற்பிள்ளையும்பாலென்றழாமற்பசியெனுஞ்சொல்
மொழியாமலென்னைவரவிட்டபாவிமுசித்துச்சனத
கழியாமலாவளித்தாய்வல்லமாநகர்காளத்தியே. ௩

சீதக்காதிபேரில்.

ஓர்தட்டிலேபொன்னுமோர்தட்டிலேநெல்லுமொக்கவிற்கும்
கார்தட்டியபஞ்சகாலத்திலேதங்கள்காரியப்பேர்
ஆர்தட்டினுந்தட்டுவாராமலேயன்னதானத்துக்கு
மார்தட்டியதுரைமால்சீதக்காதிவரோதயனே. ௪

தேசித்துவந்தகவிராசர்தங்கட்குநித்தநித்தம்
பூசிக்குநின்கைப்பொருளொன்றுமேமற்றப்புல்லர்பொருள்
வேசிக்குஞ்சந்துநடப்பார்க்கும்வேசிக்கும்வேலைசெய்யுந்
தாசிக்குமாகுந்தண்டாய்சீதக்காதிநரபதியே. ௫

ஈயாதபுல்லரிருந்தென்னபோயென்னவெட்டிமரம்
காயாதிருந்தென்னகாய்த்துப்பலனென்னகைபரப்பிப்
போயாசகமென்றுரைப்போர்க்குச்செம்பொன்பிடிபிடியாய்
ஓயாமலீபவன்வேள்சீதக்காதியொருவனுமே, ௬

காய்ந்துசிவந்ததுசூரியகாந்திசலவியிலே
தோய்ந்துசிவந்ததுமின்னார்நெடுங்கண்கடொல்பலநூல்
ஆய்ந்துசிவந்ததுபாவாணர்நெஞ்சமனுதினமும்
ஈந்துசிவந்ததுமால்சீதக்காதியிருகரமே, ௭

செட்டாளன்காயற்றுறைசீதக்காதிசிறந்தவச்ர
நாட்டான்புகழ்க்கம்பநாட்டிவைத்தான்றமிழ்நாவலரை
ஓட்டாண்டியாக்கியவர்கடம்வாயிலொருபிடிமண்
போட்டானவனுமொளித்தான்சமாதிக்குழிபுகுந்தே; ௮

வேல்கொடுத்தாய்திருச்செந்தூரர்க்கம்மியின்மீதுவைக்கக்
கால்கொடுத்தாய்நின்மணவாளனுக்குக்கவுணியர்க்குப்
பால்கொடுத்தாய்மதவேளுக்குமூவர்பயப்படச்செங்
கோல்கொடுத்தாயன்னையேயெனக்கேதுங்கொடுத்திலையே. ௯

பொல்லாதமூர்க்கருக்கெத்தனைதான்புத்திபோதிக்கினும்
நல்லார்க்குண்டானகுணம்வருமோநடுராத்திரியிற்
சல்லாப்புடைவைகுளிர்தாங்குமோநடுச்சந்தையினிற்
செல்லாப்பணஞ்செல்லுமோதில்லைவாழுஞ்சிதம்பரனே. ௰

மூவேந்தருமற்றுச்சங்கமும்போய்ப்பதின்மூன்றொடிரு
கோவேந்தருமற்றொருவேந்தன்குடையுமற்றுப்
பாவேந்தர்காற்றிலிலவம்பஞ்சாகப்பறக்கையிலே
தேவேந்திரதாருவொத்தாய்ரகுநாதசெயதுங்கனே. ௧௧

முன்னநின்னன்னைமுலையூட்டிடையிட்டுமூக்குச்சிந்திக்
கன்னமுங்கிள்ளியநாளல்லவேயென்னைக்காப்பதற்கே
அன்னமுமஞ்ஞையும்போலிருபெண்கொண்டவாண்பிள்ளைநீ
இன்னமுஞ்சின்னவன்றோசெந்தூரிலிருப்பவனே. ௧௨

முற்கனையப்பனையேறவிட்டாட்கொண்முதல்வருள்ளக்
கற்கனைக்கும்படிபோதித்திடுக்கநுனைக்கடலைச்
சிற்பனைத்தட்டிடையைவெக்கெந்தித்திக்குஞ்செங்கரும்பின்
சர்க்கரைக்கட்டியைக்கண்டேன்செந்தூரினந்தானத்திலே. ௧௩

சின்னஞ்சிறுபிள்ளை செங்கோட்டுப்பிள்ளை சிவந்தபிள்ளை
பொன்னம்பலப்பிள்ளை பூலோகமெங்கும் புகழும்பிள்ளை
சொன்னெஞ்சழல்கின்றருணைவென்ற சொக்கேசர்பிள்ளை
வன்னக்கிளிப்பிள்ளை செந்திருத்துறத்திற்குமாப்பிள்ளையே. ௧௪

நாட்டிற்சிறந்ததிருமலைராதுங்கநாகரிகா
காட்டில்வனத்திற்றிரிந்துழலாமற்கலைத்தமிழ்தேர்
பாட்டிற்சிறந்தபடிக்காசனென்றொருபைங்கிளியைக்
கூட்டிலடைத்துவைத்தாயினாதாவென்றுகூப்பிடுதே. ௧௫

விண்ணுக்குமண்ணுக்கும்போய்விளங்குதேவேந்திரனென்னு
கண்ணுக்கினியதுரைசிதக்காதிகடலங்கர்
தன்னுக்கிசைந்தவதனசந்திரோதயசாமியிந்த
மண்ணுக்குள்ளேயொளித்தான்புலவோர்முகம்வாடியதே ௧௬

பறந்தாகிலுமொக்காசுங்கொடாமடமாந்தர்மண்மேல்
இறந்தாலென்னவிருந்தாலென்னவிறந்துவிண்போய்ச்
சிறந்தானுங்காயற்றுரைசிதக்காதிதிரும்பிவந்து
பிறந்தாலொழியப்புலவோர்தமக்குப்பிழைப்பில்லையே, ௧௭

அன்னைக்கன்றுமுத்தனைக்குனிக்குமிறையனையனைக்குமேயன்று
மன்னனைக்கன்றிப்பின்னனைக்குகலாவன்புளாய்வருந்திவாடுவனோ
முன்னனைக்கொன்றுபின்னனைப்புரந்தமுதுபழையவன்றாவுருமற்
கன்னனைக்கொன்றுவிசயனைப்புரந்தகவுத்துவாகாயவாதிபனே. ௧௮

கல்லடிக்குறளியிரண்டுசோடிக்குளடிப்பதெனக்கவிதைசெட்டு
பல்லடிக்கக்கிடுகிடெனப்பறையடிக்குநெஞ்சர்தமைப்பாடுவேனோ
வில்லடிக்கும்பிரம்படிக்குங்கல்லடிக்கும்விரும்பிநின்றமெய்யனின்ற
செல்லடிக்குந்தடவரையிற்சேறடிக்கவலையடிக்குஞ்செந்திலானே. ௧௯

குட்டுதற்கோபிள்ளைப்பாண்டியனிங்கில்லைக்
குறும்பியளவாக்காதைக்குடைந்துதோண்டி
எட்டினமட்டறுப்பதற்கோவில்லியில்லை
இரண்டொன்றாமுடிந்துதலையிறங்கப்போட்டு
வெட்டுதற்கோகவியொட்டக்கூத்தனில்லை
விளையாட்டாக்கவிதைதனைவிரைந்துபாடித்
தெட்டுதற்கோவறிவில்லாத்துரைகளுண்டு
தேசமெங்கும்புலவரெனத்திரியலாமே, ௨௰

சீதக்காதியின்பேரில்தாசிபாடியது.

தினங்கொடுக்குங்கொடையானே
தென்காயற்பதியானேசீதக்காதி
இனங்கொடுத்தவுடைமையல்ல
தாய்கொடுத்தவுடைமையல்லவெளியாளாசை
மனங்கொடுத்துமிதழ்கொடுத்துமபிமானந்
தனைக்கொடுத்துமருவிரண்டு
தனங்கொடுத்தவுடைமையெல்லாங்கள்ளர்கையிற்
பறிகொடுத்துத்தவிக்கின்றேனே. ௨௫

ஆகச்செய்யுள்-௩௮௭.

---

## சவ்வாதுப்புலவர்.

கிளையாளன்சேதுபதிரகுநாயகன்கிஞ்சுகவாய்
இளையார்கலவியிடத்துநம்மீசரிடத்துமென்றும்
வளையாதபொன்முடிசற்றேவளையுமகுடமன்னர்
தளையாடியகையிற்காளாஞ்சியேந்துஞ்சமயத்துமே. (௧)

பானுகிரணம் பார்க்கும்பங்கேருகநிலவு
தானும்வரப்பார்க்குஞ் சகோரங்கள்—வானமரும்
மையைப்பார்க்கும்மயில்கண் மாவிசயானந்தாங்கன்
கையைப்பார்க்கும்புலவோர் கண். ௨

பாலையிலாள்பின்னங்காற் பஞ்சுளியென்றேசுளிப்பாள்
பாலையிலாள்பின்னென் படுவாளோ—சோலையிலே
ஆடுமயிற்பிரம்பூ ரானந்தாங்கதுரை
நாடுதனிலென்னிளமின் னாள். ௩

பஞ்சு-உளியென்றுகோபிப்பாள்.

அலையான்கவடுபடா னருட—னுங்காயான்
இலையென்பதோர்நாளு மில்லை—கலைநேர்ந்த
சாலைமுத்துக்கிருஷ்ணனருள் சற்குணசிந்தாமணியைச்
சோலையென்றுசொன்னவரார் சொல். ௪

செல்லப்பன்கச்சியிலே சேர்ந்ததற்பிறையணிகள்
நல்லதருமேக நவநீதியஞ்—சொல்லவே

ஒட்டின் றியொன் றிரண்டு மூன்றுநான் கைந்தாறேழ்
எட்டொன் பான்பத் தானவே. ௫

கச்சிசெல்லப்பன்றோன்றினபின், அவனேறிசேர்ந்து ஆ-ஒன்று இரண்டாயின, மணி-மூன்று-நான்காயின, தரு-ஐந்து-ஆறாயின, பேசப் ஏழு-எட்டாயின, கிரியம்-ஒன்பது-பத்தாயின.

ஆகசெய்யுள்—௧௬௨.

---

## காளிமுத்து.

நெல்லைச்சொன்னபாணத்தை நக்கைப்பாவைநிதநிதமும்
வெல்லச்சொன்னவலர்க்கியுங்குழந்தைவிசயதின்பாற்
செல்லச்சொன்னவென்னையிப்போதென்னையலைத்திருக்கிறதென்று
சொல்லச்சொன்னளந்தமின்னுள்பன்னண்மலர்ச்சோலையிலே. (௧)

பழுத்தான்மரத்திற்பறவையைப்போலநற்பாவலர்க்குக்
கொழுத்தான்வழங்குங்குழந்தையென்கொங்கையைக்கூறுங்கால்
அழுத்தாதவேலாயில்வெந்நீர்பன்னீர்மதியும்பழல்சேர்
கொழுத்தான்மதனுங்கொழுத்தான்பருவக்குறிப்பறிந்தே. ௨

பொன்றோர்மருமத்தன்பூம்பாவைவேலப்பபூபனருள்
மன்றகுழந்தைக்குநாதநீசவமோதயனே
பன்னண்மலர்க்குழற்பின்னெங்காருநம்பரிந்தணைய
நன்றெனிந்நாள்வரச்சொன்னண்மின்னண்மணநாளென்னவே. ௩

மாகமழைக்கரன்பூம்பாவைவேலப்பன்மைந்தன்மின்னார்
மோகன்குழந்தைக்குநாதன்வெற்பினின்மோடிவைத்துப்
பாகமொழிக்குழன்மாசேவித்துப்படபெடுசெரும்
நாகமறைத்துக்குழையைக்கிழித்தலைமலவே. ௪

போதத்தைதேவும்பயிலைக்குழந்தைக்குப்போர்மதன்செய்
கேதத்தையுங்குயிலோதத்தையுந்தணக்கின்னைத்திற
மோதத்தையுந்துயிலாதத்தையும்பயன்முட்டுதென்றல்
வாதத்தையுந்தரியாதத்தையுஞ்சொல்லியாதத்தையே. ௫

வண்டார்க்கிசைபயின்மாலையிச்வேலப்பன்மைந்தனிதி
கொண்டான்கிளையைவளர்த்தான்குழந்தைக்குவட்டியின்மீனை
பண்டார்க்கிசையினன்மால்வெண்டுபாப்பன்குளத்திலடுக்
கண்டார்க்கிசைக்கிழித்தலென்னபாவர்க்குருதாவதே. ௬

பார்ப்பன்-அவர்பாணன்-குளத்தினடுக்கண்-நெற்றிக்கண்ணாகிய அக்கினி-தாங்கி-அவன்வாகனமாகிய-ஆடு.

வனக்கொந்தளவஞ்சிபூஞ்சோலைத்தஞ்சிவளருமிரு
தனக்குன்றுசெய்யுந்தொழில்சொல்லவோதமியேனைக்கண்டாற்
கனக்கும்புளகிக்கும்பரிக்கும்பூரிக்குங்கண்கறுக்குஞ்
சினக்குந்தனக்குமெனக்குமுண்டாக்குந்தினஞ்சண்டையே. ௭

ஆகசெய்யுள்-௩௬௬.

---

## பாண்டியன்கலித்துறை.

சராஜசம்புஷவரியென்மாதுசரீரமெல்லாம்
பொராசரத்துக்கிவள்பொருட்டோபசும்பொற்கிண்ண
சுராசதிவ்யகிரீடவிபாடத்துடித்தடக்கைப்
பராசராவணராமபராக்கிரமபாண்டியனே. (௧)

காலைமுகிற்குலமெல்லாம்விலக்குகடிந்திட்டநீ
வேளையுடப்படிச்செய்திலையேவிளைநெல்வயலில்
வாளைகுதித்துவளர்பூங்கமுகின்மடலொடியப்
பாளைமுறிக்குந்துறைவபராக்ரமபாண்டியனே. ௨

ஆர்க்குங்குளிருநிலவுயர்கோனின்னலங்கல்பெறு
வார்க்குங்குமமுலையாட்கனலாகும்வடக்குந்தெற்கும்
மேற்குங்கிழக்குமொருவெகுப்பாய்நின்றுவிண்ணையெட்டிப்
பார்க்கும்புகழுக்கிறைவபராக்கிரமபாண்டியனே. ௩

கூரம்பொறுத்தவிழியாள்கதலிக்குருத்திலிட்ட
ஈரம்பொறுக்கவருந்திலளேயிந்திரனிட்டசெம்பொன்
ஆரம்பொறுத்தபுயமீதிலாயிரநாவுரக
பாரம்பொறுத்தபுயலேபராக்கிரமபாண்டியனே. ௪

வெறிக்குங்குமக்கொங்கைமீதேயிளம்பிறைவெள்ளைநிலா
எறிக்கும்பொழுதுவந்தாயிலையேயிலங்காபுரியைக்
குறிக்கின்றராவணன்பொன்முடிபத்துங்குரங்கைவிட்டுப்
பறிக்கின்றசண்பகமாறுபராக்ரமபாண்டியனே. ௫

கரும்பேயக்கும்வாட்கண்ணிபங்காளர்கண்கொண்டுசுட்டுவிட்ட
பெரும்பேய்க்குமேவப்பிலைக்காப்புதவாய்பிணர்ச்சர்பசந்தோர்

கரும்பேய்க்குமென்முலையாரமுதூட்டியபட்டர்க்குக்கொல்ல
வரும்பேய்க்குவானுதவுங்குலசேகரமன்னவனே. ௬

பூணித்திலத்துப்புயல்வீரமாறன்புகல்கவிக்கு
நாணிப்புலவர்செல்லாதென்செய்வாரிந்தநாணிலத்தில்
ஆணிக்கனகமணந்தரிற்பூமணம்யார்கொள்ளுவார்
மாணிக்கந்தித்திக்கிலென்னாகுமற்றமதுரங்களே. ௭

எண்ணீர்மைநூலுக்ககத்தியனாமிவனென்பதெல்லாம்
வெண்ணீர்மையன்றிவிசகல்லவேயிவ்வியனுலகிற்
பண்ணீர்மைதேரும்பராக்கிரமமாறன்பதங்கழுவுந்
தண்ணீர்குடித்தல்லவோகும்பயோனிதமிழ்க்கற்றதே. ௮

காம்புவனம்புக்கதோளாட்குநின்றன்கழுத்திலிட்ட
வேம்புதனக்கும்விதியில்லையோவெகுண்டாச்சியர்கள்
தாம்பினடிக்கவுரலோடுகட்டத்தடைப்பட்டுச்சீப்
பாம்பினடிக்கின்றபராக்ரமபாண்டியனே. ௯

கடந்தூங்குவேழப்பிடர்க்கேவரக்கண்டுகண்கண்மூத்து
வடந்தூங்குவாடும்கிளிக்கென்செய்வேன்மணிவாய்திறக்க
விடந்தூங்குபாம்பின்படத்தின்மிசைதிமிதித்திடவெனப்
படந்தூங்கவாடும்புயபராக்ரமபாண்டியனே. ௰

சடம்பழுக்குங்கிழட்டுக்குருகிர்தலைசாய்த்துநின்று
முடம்பழுக்குங்கைதைநற்றுறையிற்றெங்குமுப்புடைக்காய்
குடம்பழுக்குஞ்சொற்கையாங்குலசேகரன்கூடலிலென்
உடம்பழுக்குஞ்சிறையும்பழிசாருணர்ந்திலரே. ௧௧

மற்றெருப்பிலாக்கொடைச்சண்பகமாறவரோதயநின்
வெற்றிக்கிரண்டெண்டடங்காதகாரியமேருகிரிச்
சுற்றிலுங்கீர்த்தியடங்காதுநின்னுடைத்தோடமுவாக்
கற்றைக்குழலிக்குமாலடங்காதிதுகைகண்டதே. ௰௨

விருத்தம்

ஒருவீணுதல்பண்டுளங்களிக்கவுயர்வான்முகடுகிழித்தெதிர்ந்து
மருவார்தருவின்மாங்கொணர்ந்தமதலைவடிவேலதிவீரா
அரவார்வேம்பின்பசுங்கண்ணியந்தியிறைவிக்கருளென்று
இரவாநிற்கவீயளித்தற்கொங்காதிருந்தாயிருநாளே. ௰௩

இரட்டையர்.

தேங்குபுகழாங்கூர் சிவனேயல்லாளியப்பா
நாங்கள்பசித்திருக்கை ஞாயமோ—போங்காணும்

கூழுசக்குடமன்னுமாசகொட்டோசையல்லாமற்
சோறுகண்டமூளியார்சொல். ௰௪

மூடர்முன்னேபாடன் மொழிந்தாலறிவரோ
ஆட்டித்ததென்புலியூர்ப்பல்லவா—ஆடகப்பொற்
செந்திருவைப்போலணங்கைச் சிங்காரித்தென்னபயன்
அந்தகனேநாயகனானால். ௰௫

வேயீன்றமுத்தர்சமை வெட்டிறேனையிடையன்
தாயீன்றமேனி தயங்கவே—போயேசேள்
எய்தனைகொண்டேற விடறுவான்பாற்குடத்தை
அத்தனையும்வேண்டு மவர்க்கு. ௰௬

மாங்காட்டுவேளாளன் மகளைமருமகன்பாற்
போங்காட்டிலின்பம் புணர்ந்தானே—ஆங்கானும்
மக்கள்மெய்தீண்ட லுடற்கின்பமற்றவர்
சொற்கேட்டலின்பஞ் செவிக்கு. ௰௭

குன்றுங்குழியுங் குறுகிவழிநடப்ப
தென்றுவிடியுமெமக் கென்கோவே—ஒன்றுங்
கொடாதானைக்கோவென்றுங் காவென்றுங்கூறில்
இடாதோநமக்கிவ் விடு. ௰௮

காளமேகப்புலவரும்—இரட்டையரும்.

நாணென்றுநஞ்சிருக்கு நற்சாபஞ்சற்சாபம்
பாணந்தாமண்டின்ற பாணமே—தாணுவே
சீரார்மேவுஞ் சிவனேநீயெப்படியோ
நேரார்புரமெரித்த நேர். ௰௯

ஆசுகவியாலகிலவுலகெங்கும்
வீசுபுகழ்க்காள மேகமே—பூசுரா
விண்கொண்டசெந்தணலாய் வேகுதேயையையோ
மண்டின்றபாணமென்ற வாய். ௨௰

கட்டளைக்கலித்துறை.

புராதனமான தமிழ்ப்புலவீர்க்குப்புன்குரங்கு
மாமரம்விட்டிங்குவந்ததென்னேவகைகேட்டிலையோ
தராதலம்வென்றதமிழ்ராமனையுந்தன்தம்பியையும்
இராவணனென்றுமிலக்குவனென்றுமிருந்ததுவே. ௨௧

ஆக செய்யுள்—௬௨௰.

## ஒப்பிலாமணிப்புலவர்பாடிய அகவல்.

ஆடெரிபடர்ந்தகோடுயரடுப்பில்
ஆம்பிபூப்பத்தேம்பசியுழல
இல்லிதூர்ந்தனபொல்லாவறுமுலை
சுவைதொறுஞ்சுவைதொறும்பால்காணுமற்
குழவிதாய்முகநோக்க
மனைவியென்முகநோக்கயானும்
நின்முகநோக்கிவந்தனன்குமணா. ௧

### குமணராஜன்.

அந்நாள்வந்திலையருங்கவிப்புலவோய்
இந்நாள்வந்துநீநொந்தெனையடைந்தாய்
தலைதனைக்கொடுபோய்த்தம்பிகைக்கொடுத்துதன்
விலைதனைமீட்டுன்வெறுமைநோய்களையே. ௨

மாந்தையிலேவாழு மகுடத்தியாகியுனக்
கேந்துதழும்போ லிரண்டுளதே-வேந்தர்
முடித்தழும்புன்காலிலே முத்தமிழோர்க்கீயும்
படித்தழும்புன்கையிலே பார். ௩

வெம்புக்காலிலெதுப்பிவிழுஞ்சிரம்
செம்பொன்கோடிவிலையெனச்சிந்தித்தான்
உம்பர்நாடுமுலகிலுந்தேடினும்
எம்பிபோலெமக்கியாவருரியரே. ௪

ஆறுபெருக்கற் றருந்திடர்தான்பட்டாலும்
ஊறலைமையாதோ உலகாற்றத்-தேற
வறியையேயானாலு மென்கலியைமாற்றச்
சிறியையோசீர்க்குமணா செப்பு. ௫

வில்லேவளையாதே மீசைமுறுக்கிச்சினத்து
முல்லைமலரம்பையெய்மேன் மோதாதே-நில்லடா
வந்தாரடாமுருகர் வந்துகடப்பந்தாரைத்
தந்தாரடாமன் மதா. ௬

செந்திற்குமாரன் றிருவழகைக்கண்டவுடன்
வந்திக்குமாரன் வளைதக்கிறான்—அந்திக்கு

முன்னமேசென்றெனது மோகமெலாஞ்சொல்லிவந்தால்
அன்னமேகும்பிடுவேன் யான். ௭

தங்கடனமிருக்கத் தார்வேந்தரெல்லோரும்
எங்கடனைத்துக்கே யிச்சிப்பார்-எங்கடனம்
கச்சிருக்கும்பாலிருக்குங் காமபாணங்கள்பட்டு
பிச்சிருக்கும்வேண்டாம் பிளாய். ௮

இரவோர்சிறிதிங் கிரப்போர்பெரிது
கெடுவாய்நமனே கெடுவாய்-படுபாவி
கூவத்துநாரணனைக் கொன்றாயேகற்பகப்பூங்
காவெட்டலாமோ சரிக்கு. ௯

மையூருங்கண்ணார் மயங்கப்பொருகரும்பு
கையூருங்காமனுங் கண்ணனை-செய்யூர்
வளவனையினான்பிரிந்த வாறுனக்குச்சொன்ன
உளவனையினானென் றுரை. (வளவன்-நயினான்) ௰

ஆழிவாய்ச்சத்த மடங்காதேயான்வளர்த்த
கோழிவாய்மண்கூறு கொண்டதோ-ஊழி
இரண்டதோசங்கு றினகாணுந்தேரும்
உருண்டதோபாதாளத் துள். ௰௧

அரவங்காந்ததோ வச்சுமாமிற்றுப்
புரவிக்கயிறறுவிப் போச்சோ-இரவிதான்
செத்தானோவில்லையோ தீவினையோபாங்கியெனக்
கெத்தால்விடியு மிரா. ௰௨

முலையுங்குழலு முளைப்பதற்குமுன்னே
கலையும்வளையுங் கழன்றாள்-மலையில்
கிராப்பளியானேறிவருஞ் சேவின்மணியோசைக்
கிராப்பழியுங்கொள்ளா ளிவள். ௰௩

பாண்டியன்றானோனென் பசலைமுலைப்பாலானேன்
ஆண்டிகையிலேக்கியதோன் றுமேனமேனே-வேண்டியபோ
துள்ளங்கைத்தேனானேன் றோமதலைபூத்தபின்
புள்ளங்கைத்தேனானே னுனக்கு. ௰௪

முட்டத்துப்பன்றி முளறித்திருப்பதத்தைக்
கிட்டத்துப்பன்றிக் கிடக்கேனே-தொட்டு

மருங்கிலேசங்கெடுத்தமாலேயெனக்கு
வருங்கிலேசங்கெடுக்க வா. ௰௫

மாதர்க்கிதங்கவிவாணர்க்குச்சாலவணக்கங்குரு
நாதர்க்குநீதியோடாசாரநண்பினயந்தவர்க்குக்
கோதற்றவாசகம்பொய்க்குப்பொய்கோளருக்குக்கோளறிவி
லாதர்க்கிரட்டிப்பறிவுடையோர்செய்யுமாண்மைகளே. ௰௬

குழற்காலாவிந்தங்கூம்பக்குமுதமுகையவிழ்ப்ப
நிழற்சான்மதியமன்றேநின்றிருக்குலநீயவன்றன்
அழற்சாலவிர்சடைமீதேயிருந்துமவ்வந்திவண்ணன்
கழற்காலவணங்குதியோவணங்காமுடிக்கைதவனே. ௰௭

பாட்டாணைதவண்டுபாடுங்குழற்சண்பகவல்லிதன்
றாட்டாமரையைத்தொழுதேனினியென்றலையில்விதி
நீட்டான்கருமுகில்போலேவருமந்தச்சேட்டெருமை
மாட்டானினிவரமாட்டான்வந்தாலும்வணங்குவனே. ௰௮

சீமானுமாமகள்கோமானுமேத்தித்தினம்பணிந்து
பூமாலைசாத்தியபாதச்சபாபதிபொன்னடிக்குப்
பாமாலைசாத்தினின்றேனவனென்மிசைப்பாடுபட்ட
எமாவுன்றனியாமாவென்பாலினியெய்துதற்கே. ௰௯

தடங்கொண்டகல்வில்லின்மெல்லெனப்பூட்டித்தமதூரத்தில்
லிடங்கொண்டுசாத்திவிடங்கொண்டுபார்த்துமணிகிளரும்
படங்கொண்டபாம்பிற்பழகியபின்மலைப்பாவைதன்னை
இடங்கொண்டவொற்றியாகேசர்புற்றினிடங்கொண்டதே. ௨௰

விடங்காட்டிக்கண்டத்தியமீருமுரிகாட்டித்தன்மெய்யினைப்புற்
றிடங்காட்டிவாலெயொருபுறங்காட்டிவண்டேறுமலர்த்
தடங்காட்டியபொழிலாரூர்த்தியாகர்தமதுபொற்றாட்
படங்காட்டிபாடிநின்றாருலகேழும்பலியென்னவே. ௨௧

புரந்தனைமாலைச்சதானனத்தனைப்போகியமுப்
புரந்தனைச்சாதித்தினமயாதகாட்டப்புலோமசைவாழ்
புரந்தனைமாணுந்திருவொற்றியூரநின்பொன்மணிக்கோ
புரந்தனைக்கண்டனன்காணேனுதிக்கும்புரந்தனையே. ௨௨

வெண்பா.

நல்லப்புலியணிக்கோடுளதனுக்கெட்டாநாள்
வில்லைப்புடன்கூடிவிட்டாலும்வல்லி

இடையாளேமுன்னுலக மேழளந்தோன்மைந்தன்
குடையானதன்றோ பொடிநூ.(அம்புலியைந்தோருள்-ஆதிரை) ()

எட்டாநாள்-அத்தம்-கை-வில்-புருவம்-அம்பு-கண்.

வாழ்நிலைசேர்பொன்னுலகம் வண்களந்தைக்கோபுரத்தின்
ஏழ்நிலைமேலேறிடினு மேறலாம்-பாழ்பணமே
அணபுன்னைக்காட்ட வானறிவதேயருமை
தென்புன்னைக்காட்டனடி சேர். ௨௪

கஞ்சிகுடியாளே கம்பஞ்சோறுண்ணாளே
வெஞ்சினங்கொளன்றும விரும்பாளே-நெஞ்சதனில்
அஞ்சுதலையாவாருக் காறுதலையாவாளே
கஞ்சமுககாமாட்சி காண். ௨௫

சேதாறவிந்தபுயன் றென்னவன்றன் றிண்சிலம்பிற்
போதாலுங்கண்ணாலும் போர்செய்வோர்-கோதும்
கொடியிடையார்தம்மாற் குணமாமோவிந்தத்
துடியிடையார்கொண்ட துயர். ௨௬

போதாற்போர்செய்வான்-மன்மதன்-கண்ணாற்போர்செய்வான்பரமசிவன் இவர்கள் கொடிமீனம்-இடபம்-இவற்றிடையிலுள்ளது-மேஷம்-ஆடு.

அப்பிலேதோய்த்திட் டடுத்தடுத்துநாமதனைத்
தப்பினுநம்மையது தப்பாதோ-இப்புவியில்
இக்கலிங்கம்போனாலென் னேகலிங்கமாமதுநாச்
சொக்கலிங்கந்தானிருக்கச் சொல். ௨௭

ஆகசெய்யுள்-௪௪௬.

---

## பட்டணத்துசுவாமிகள்.

நாப்பிளக்கப்பொய்யுரைத்துநவநிதியந்தேடி
நலமொன்றுமறியாதநாரியரைக்கூடிப்
பூப்பிளக்கவெழுகின்றபுற்றீசல்போலப்
புலபுலெனக்கலகலெனப்புதல்வர்களைப்பெறுவீர்
காப்பதற்கும்வகையறியீர்கைவிடவுமாட்டீர்
கவட்டுத்தொன்மரத்திடுக்கிற்காலுழைத்துக்கொண்டே
ஆப்பதனைப்பிடித்தசைத்தபேய்க்குரங்குபோல
அகப்பட்டீர்கிடந்துழலவகப்பட்டீர்நீரே. (௧)

## சிவப்பிரகாசசுவாமிகள்.

ஐயநின் சென்னியிசை யுறைகின்றாட மங்கை யாரென்னவுமை வினவவும், அன்னதொரு மடமங்கை யன்றுவெண் டிரைகொழித் தெழுங்காழு குதண்புனலெனத், தூயவெளியானனங் கரியவிழிகாதுலாய்த் தோயத்திலுண்டோவெனச், சொல்லருக் கமலமலர் காவிமலர் கொடிவள்ளை தூயசெங் குமுதமென்னப், பொய்யெனநினைத்துநற் கொங்கையுங்கூந்தலும் புனலினிடையுண்டோவெனப், புற்புதத்தொகைச் சைவலமதெனவேமறுத்தாப் புகன்றிடுதிநங்காயெனத், தையலவளேனென்ன நாணொடுவணங்கியென் றன்பிழைபொறுத்திடென்றே, சங்கரனுரைத்திடத் திருவுளமகிழ்ந்த சிவசங்கரியுமைகாக்கவே. ௨

அரனவனிடத்திலே யைங்கரன்வந்துதா னையவென் செவியைமிகவும், அறுமுகன்கிள்ளினானென்றுசிணுங்கிடவு மத்தன் வேலவனைநோக்கி, விரைவுடன் வினவவே யண்ணனென் சென்னியில் விளங்குகண் ணெண்ணினனென்ன, வெம்பிடும்பிள்ளையைப் பார்த்துநீயப்படி விகடமேன் செய்தாயென, பருவுமென் கைந்நீள முழமளந்தானென்ன மயிலவனகைத்துநிற்க, மலையரயனுதவவரு முமையவளைநோக்கிநின் மைந்தனைப்பாராயெனக், கருதரிய சடலமிடை யுருகுபலவண்டங் கருப்பமாய்ப்பெற்றகன்னி, கணபதியையருகழைத் தகமகிழ்வுகொண்டனள் களிப்புடனுமைக்காக்கவே. ௩

அம்பிகையரன்றன்னை நோக்கியுன் றொபாணமாவமென வுமையைநோக்கி
அரியரவசயனத்தையரவுருவமானத்தையறியார்கொல்சிறிதுமென்ன
நம்பிமனைதொறுமிரந்துணுமாண்டிநீயென்னநான்றதனறிவேனென
நகைவுறும்பொய்புகன்றீயெனப்பாரதநடந்ததேதரியாவென
வெம்பியொருவன்பிரம்பாலடித்தானென விளக்கியொருத்திதாய்ப்பால்
வீசினாள்சொல்லென்ன வெண்ணூறாயிரம்பெண்கண்மிகு சலசமதீக்கினை
பம்புகற்பினிலோரிரட்டிப்புதீக்கினது பதருமனீகேளெனப் [யெனப்
பரமருடனிவ்வாறுவிளையாடுபச்சைப்பசுங்கொடியுமைக்காக்கவே. ௪

அச்சுதனளிப்பனிலமுமதுநேபன்வித்தையறுனைவன்பலபத்திரன்
அலமுதவுவன்சமன்பசடவனக்கமக்காளதோரொருதுமுண்டேட்
முச்சிரவயிற்படையினைக்கொழுவதாக்குவோமொப்புடனிழுத்திறுக்க
முந்தியவடக்கயிற்றுடன்மற்றுமாதன்பர்முன்போயிரந்துகொள்வோம்
இச்சையுடமதிளையதனையறகியகந்தனினிமைபொருமேய்ப்பன்
இனியுழுதுபயிரிடுதனன்றென்றிதைவிட்டிரந்துண்பதினமெனவே
ம

திருந்துதமிழிலக்கணவைந்திணைக்கோவை விருத்தகிரிச்செல்வற்கோ
னார், பெருந்தகைமையுடையம்யாம்விடுமோலைவெங்கனூர்ப் பிடாரிகா
ண்க இரும்புவிரிலொருமுருங்கைக்கொம்பொடியாமற்காத்திங்கிருக்குநீ
ம்முநங்கைதனைவேரோடுங்களைந்தனையென்றாலுனக்குமுறைநன்றோ

இவர்பிதா

சால்வாய்ந்தகன்னியுலகின்றலல்லிபங்காவுனது
சொல்வாய்த்தவப்பர்க்குமல்லாதவர்க்குஞ்சிரிப்பல்லவோ
இயல்வாய்ந்தவெங்கைதக்கியான்வாய்த்ததுமிங்கென்றெனக்கு
வயல்வாய்த்ததுமனைவாய்த்ததுமைந்தர்கள்வாய்த்ததுமே. ௰௩

முன்னமொருதமிழ்ப்புலவன்றனை யுண்டுகண்டசவைமுதிர்ச்சிய
லே.தன்னியலைமுழுதுமுனைத்தமையர்முன்னினைக்கவர்ந்துதடங்காளத்
தி,பன்னவனுண்டானெனதுமாதவத்தின்வலிதிரமண்ணின்மீதே, என்
னுடன்வந்தவதரித்தவிளங்கருணைப்பிரகாசனென்னுங்கோவே. ௰௪

நாணிவெண்பனைநரியென்றுரைத்திடுநகையால்
வேனுவானதுவளைந்துபோய்புகுந்ததுவென்றாற்
காணலாவதோருருவமெங்நாரியைக்கண்டால்
பூணுவார்மயல்காளையொன்பதுப்புதிதோ. ௰௫

அல்லிமலர்ப்பண்ணவனு மாராய்ந்தறிகவிதை
சொல்லுமிநவரிடைத் தோன்றியான்—முல்லை
அரும்பிற்பொலிபு மணிமுறுவனல்லாய்
கரும்பிற்கணுசேர்த்தேன் காண். ௰௬

வேலையசுவாமிகள்.

ஆண்டதனாலெனையொவ்வாய்வித்தையினிற் றாமானினுமதிகமொ
ன்றே,பூண்டவுலகதனிலுள்ளோர்புகல்வதுகேட்டிருந்துமென்னபுதுமை
தானோ,காண்டகுகண்மணியேநல்விளங்கருணைப்பிரகாசக்காளாய்நீதான்,
மாண்டனையென்றறிந்திருந்துமுயிர்தரித்தேன்யானுமிருவன்னெஞ்சே
னே. ௰௭

சத்திமுத்திப்புலவர்.

நாராய்நாராய்செங்கானாராய்
பழம்படுபனையின்கிழங்குபிளந்தன்ன
பவளக்கூர்வாய்ச்செங்கானாராய்

நீயுநின்மனைவியுந்தென்றிசைக்குமரியாடி
வடதிசைக்கேகுவீராயின்
எம்மூர்ச்சத்திமுத்தவாவியுட்டங்கி
நனைசுவர்க்கூரைக்கனைகுரற்பல்லி
பாடுபார்த்திருக்குமெம்மனைவியைக்கண்டு
எங்கோன்மாறன்வழுதிகூடலில்
ஆடையின்றிவாடையின்மெலிந்து
கையதுகொண்டுமெய்யதுபொத்திக்
காலதுகொண்டுமேலதுதழீஇப்
பேழையுளிருக்கும்பாம்பெனவுயிர்க்கும்
ஏழையாளனைக்கண்டனமெனுமே ௧௮

வெறாப்புற்கையுமரிதாங்கிள்ளைசோறுமென்வீட்டில்வரும்
எறும்புக்குமாற்பதமில்லைமுன்னாளெண்ணினுங்கலியாம்
குறும்பைத்தவிர்த்துக்குடிதாங்கியைச்சென்றுகூடியபின்
தெறும்புற்கொள்யானைகவளங்கொள்ளாமற்றெவிட்டியதே. ௧௯

வரதுங்கபாண்டியன்.

அஞ்சலென்றகாதலமுங்கணபணமுங்கங்கணமு
மரைக்கிசைந்தபுலியுடையுமம்புலிச்செஞ்சடையுஞ்
சஞ்சமலர்ச்சேவடியுங்கணைகழலுஞ்சிலம்புங்
கருணைபொழிதிருமுகமுங்கண்களொருமூன்று
நஞ்சையுண்டமணிமிடறுமுந்நூலுமார்பு
நலந்திகழ்வெண்ணீற்றொளியுமரிமானுமழுவும்
பஞ்சடிச்சிற்றிடையுமையாளொப்பனைபாகமுமாய்ப்
பால்வண்ணனுளத்திருக்கப்பயமுண்டோவெமக்கே. ௨௰

அவர்மனைவி.

ஆக்கையெனும்புழுக்குரம்பைபணைந்தணையாப்பொருளை
யருளொளியைப்பராபரத்துக்கப்புறமாமறிவை
நீக்கமறவுயிர்முழுதுக்குமிடமறவெங்கு
நிறைந்துநின்றமுழுமுதலைநினைவிலெழுஞ்சுடரைப்
பாக்கியங்கள்செய்தனந்தந்தவக்குறைகண்முடிக்கும்
பழவடியார்தமக்குதவும்பசுந்துணர்க்கற்பகத்தை
வாக்குமனவிகற்பத்தாலளவுபடாவொன்றை
மாசற்றவெறுவெளியைமனவெளியிலடைப்பாம். ௨௧

ஆக-செய்யுள்-௪௯௭.

## பலபட்டடைச்சொக்கநாதப்புலவர்.

0

நின்றுபடியாளக்குலைக்கொடிகவிரண்
டென்றுமுளவாங்குடங்கைதமிச்சுரருக்-கொன்றுக்
குரைசகுமரையிந்தாரொன்றதனுக்கென்றே
வரைக்குமறையியா ரவர். ௧

எடுத்தசனனங்கடோறு மீன்றெடுத்ததாய்மார்
கொடுத்தமுலைப்பாலனைத்துங்கூட்டில்-அடுத்தமணிப்
பைந்நாகணைத்துயின்மால் பாலாழியுஞ்சிறிதா
மன்றுசிதம்பர தேவா. ௨

முக்கண்ணனென்றரனை முன்னோர்மொழிந்திடுவார்
அக்கண்ணற்குள்ளதரைக்கண்ணே-மிக்க
உமையாள்கண்ணொன்றரைமற்றான்வேடன்கண்ணொன்
றமையுமிதனாலென்றறி. ௩

பாணியிலேபுள்ளிமான்பாகத்தேபச்சைமான்
வேணிதனிலேயோர்வெள்ளமான்-சாணுமலர்ச்
செம்மானுலவுந்திருமறைக்காட்டீசரோ
எம்மானுக்கெங்கே யிடம். ௪

சட்டளைக்கலித்துறை.

நாண்பணிந்தாலவனென்பேயுரைக்குமலரிலயன்
தான்பணிந்தாலவன்றன்றலையேசொல்லுந்தாரணியுண்
பான்பணிந்தாலவன்கண்ணேபரிந்துபரிந்துரைக்கும்
நான்பணிந்தாலெனக்கார்சொல்லுவார்சொக்கநாயகற்கே. ௫

மெய்க்கேயணியும்பணியேபொன்பேர்முடிமேற்கிடந்த
கொக்கேவெண்கூன்பிறையேயரைசேர்ந்தகொடுப்புலியே
அக்கேயுமக்குக்கிடைத்தவுபாயங்களாலெமக்குஞ்
சொக்கேசர்பாதத்தைக்கிட்டுமுபாயத்தைச்சொல்லுங்களே. ௬

தாண்டித்திரியும்விடையேறியோடொன்றுதாங்கிப்பிச்சை
வேண்டிக்சலிபுககாலந்தள்ளாமல்விரும்பிச்சொக்கர்
ஆண்டித்தொழிலைவிட்டையோமதுரைக்கரசிருந்து
பாண்டித்துரைத்தனஞ்செய்தேபிரப்படிபட்டனரோ. ௭

ROJA MUTHIAH
47, HOSPITAL STREET

ஆகத்திலேயொருபாதியென்னம்மைக்களித்தவுடன்
பாகத்திலேயொன்றுகொண்டாயவண்மற்றைப்பாதியுமுன்
தேசத்திற்பாதியுஞ்சேர்ந்தாலிருவருண்டேசிவனே
ஏகத்திராமலிருப்பாய்களந்தையுமென்னெஞ்சமே. அ

துணையானகாரிபுவியையெல்லாம்பெருங்கொல்லைவடிக்
கணையானதுபுவியெல்லாமெடுத்துண்ணுங்கைச்சிலைகள்
இணையாகநின்றுபுவியினைத்தாங்குமென்றுவிணியான்
பணையார்களந்தைப்பதியார்செயலையென்பன்னுவதே. கூ

மூன்றனைக்கூப்பிடவோடிவந்தானைமுளரிமலர்ப்
பொன்றனையேறியிருப்பானைப்பூழியன்கைக்கரும்பைத்
தின்றனையென்றுகல்லானைக்கிட்டானைத்திருமதுரை
மன்றனைவீதியிலேறிவந்தானைவணங்குதுமே. ய

நமக்கின்றுநுவலரீர்கரவேண்டுகலந்திசைழ்க்குங்
குமக்கொங்கைபாகந்தாக்கொச்சையுள்ளீர்கொடுங்கோளாவிற்
கிமைக்குப்பிறைபாளித்தாலதற்குமிருப்பசிபோ
முமக்குந்தலைச்சுமைபோமெங்கண்மானுமுயிர்பெறுமே. யக

ஆனையுரித்துமதனைப்போர்த்திட்டடியுப்பட்டு
மானமழிந்தங்கிரந்தேதிரிந்தமதுரைச்சொக்கர்
ஞானமிகப்பெறறுவாழ்வதெல்லாஞ்சொக்கநாயகியாள்
பாணிபிடித்தமுகூர்த்தத்திலல்லவந்தபாக்கியமே. யஉ

ஆய்முத்துப்பந்தரின்மெல்லணைமீதுன்னருகிருந்து
நீமுத்தந்தாவென்றவர்கொஞ்சும்வேளையினித்தநித்தம்
வேய்முத்தரோடென்குறைகளெல்லாமெல்லமெல்லச்சொன்னால்
வாய்முத்தஞ்சிந்திவிடுமோசெல்வேலிவடிவன்னையே. யங

குதியானமமீனையுதைத்துள்ளக்காலினிற்கூணிமிர
மதியாகஞ்செய்த்தவ்விலங்கேசன்மாமுடிபத்துநக
நுதியான்மிதித்துமுயல்கைன்மேனிநுறுங்கவின்னு
மிதியாதின்றருளெங்கேசொக்கேசர்தயவெல்லடிக்கே யச

மண்ணென்றமன்றலமெல்லாம்புரக்குங்கழுதிசற்றுந்
துண்ணென்றநெஞ்சந்தரித்திலதேதுனதேடனச்சில
உண்ணென்றபோதுண்டவர்சொக்கர்பாதியுடலம்பைச்
பெண்ணென்றறிந்துமடித்தானெவ்வாறுயிர்புகொண்டே.

இன்றெருக்கவேண்டிலெவ்வாறெருக்குமோவெழில்சேர்சவங்கைக்
குன்றெருக்குங்கோபுரங்கோபுரமொக்குமக்குன்றதுபோல்
அன்றெருக்கவேண்டுமென்னல்வினைதீவினையாமிரண்டும்
என்றெருக்குமோவினித்தென்களக்காடனையான்பெறவே. ௰௬

மாதாம்படியுண்டுமெய்சிவந்தான்குழல்வைத்திசைத்துச்
சேதாம்பலங்கனிவாய்சிவந்தான்செம்மலர்த்திருவின்
றாதாந்தனங்கைத்துரஞ்சிவந்தானவர்தூதுசென்று
பாதாம்புயஞ்சிவந்தான்சிவந்தான்மல்லைப்பல்லவனே. ௰௭

பாடுந்தமிழ்க்குச்சிவந்தெழுந்தான்மல்லைப்பல்லவர்கோன்
காடுஞ்செடியுந்திரியாதிட்டைக்கடுக்கன்செய்து
போடும்பொழுதென்னபூட்டகமாவற்பப்புல்லனைக்கொண்
டாடும்பொழுதிருகன்னத்திலேநின்றடிக்கின்றதே. ௰௮

சான்றெண்டனிட்டகணங்குழலாளையென்கண்மணியை
தேன்றொண்டைவாய்ச்சியைத்தென்கூடல்வாழ்சிறுபெண்பிள்ளையை
யான்றெண்டனிட்டபொழுதேயியமனெனக்குமடி
வன்றெண்டனிட்டிண்ணப்பமென்றோலையெழுதுவனே. ௰௯

மற்றோரொருவனைக்கண்டதுண்டோசத்தியவாசகராய்
உற்றோர்கழஞ்சுவெண்ணெய்க்கின்றதாய்க்கொருகோடிபொய்கள்
சொற்றோனுந்தாமரைமலர்சாட்சியென்றுசொன்னோனுமல்லால்
கற்றோர்கள்வம்பின்கள்செம்பின்கள்பொய்யின்களந்தையிலே. ௨௰

அண்டத்தமரருமாயனும்வேதனுமந்தணரும்
பண்டெத்தனைதவஞ்செய்தனரோமணப்பந்தலிலே
துண்டப்பிறையணிசொக்கர்கைத்தாலிக்குநீதுணிந்து
கண்டத்தைநீட்டினையேகூடல்வாழுங்கயற்கண்ணியே. ௨௧

அற்பின்றதாயென்றுனைப்பணிந்தாலென்னவதியெல்லாம்
பொற்பின்றபூஷணம்போற்குறித்தாய்புகழ்க்கூடலில்வாழ்
கற்பின்றசட்டிக்கரும்பேயுனக்குக்கன்னெஞ்சதுதான்
வெற்பின்றவாசனையோவுள்ளவாறுவிளம்பெனக்கே. ௨௨

பேயல்லவோவொருவேளைவரந்தந்துபேசிடுங்கல்
லாயல்லவோநின்மனங்கெட்டியானதுமற்புதந்தான்
நீயல்லவோமதுரேசர்பங்குற்றவணியெனக்குத்
தாயல்லவோபிள்ளைநானல்லவோசிவசாம்பவியே. ௨௩

பண்டோசரியமறைபாடுங்கூடற்பசுங்கிளியைக்
கண்டோதினேனென்கவலையெல்லாமினிக்காலன்றிண்டு
மூண்டோதிவந்திடும்போதம்மைகோயின்முன்னேதிரியுங்
குண்டோதரன்கண்டுகொண்டாற்றடைதட்டிக்கொள்ளுவனே, ௨௪

செகத்தாயெனவந்தமுதேதெள்ளமுதேதென்கைலையெனு
நகத்தாற்பணியுங்கயற்கண்மணியேநின்னையானைத்திறல்
மிகத்தான்கருகிறங்கொண்டமையாலும்விளங்குதிரு
முகத்தாமரைக்கொருவண்டானதுமூக்குத்தியே. ௨௫

செகமதின்மிக்கமதுரையின்மாணிக்கஞ்சொட்டியதாய்
மிகமதிரத்தினம்விற்றசொக்கேசனைமேவியன்பாச்
சுகமதிருந்தேனையாள்கயற்கண்ணிநின்சுந்தரமா
முகமதியின்றகதிர்மணியேமுத்துமூக்குத்தியே. ௨௬

பொன்னேமலைபத்துவசனுகியபுலியின்றெடுத்த
மின்னேயுனதுவதனத்தைச்சேயவெண்மதியமெனத்
தன்னையத்தாலொருதாரகையானதுதான்விரும்பி
முன்னேகிடந்தினப்பார்க்கின்றதோமுத்துமூக்குத்தியே. ௨௭

வடிகொண்டசெந்தமிழ்க்கூடலில்வாழ்சொக்கர்வந்திரும்
பிடிகொண்டபிட்டுக்குமண்ணேசுமந்துபெருமையாக்
கொடிகொண்டவெற்றித்துரைப்பாண்டியன்கைக்கொடுபிரப்பால்
அடிகொண்டபோதிலையாரவர்பொன்னடிகொண்டதே. ௨௮

அக்குவடப்புனையானைக்கவெள்ளத்தைகயற்கயற்கண்
பக்கத்திருந்தபவளாசலத்தைப்பழம்பொருளை
முக்கட்கனியைக்கடப்பாடவிச்சுண்டுமூலத்தெழுந்த
சொக்கைக்கண்டாலன்றித்தீராதுநெஞ்சிற்றுயரங்களே. ௨௯

பொன்போலுங்கூடற்பிராட்டியைச்சேவிக்கப்போம்பொழுதில்
என்பால்வரவுமெதிர்நின்றுபேசவுமென்றனைமேல்
தன்பாதஞ்சூட்டவுங்கேட்டகெல்லாந்தந்தருளவுமே
அன்பாகவந்திவோள்கலிகாலமென்றஞ்சுவளே. ௩௰

உமையேயெனும்பேனாயுணர்கின்றேனையுனைக்கருதிக்
கமையேமெனவ்வாறுகடப்பேன்வினையைக்கடந்தகுண
வமையேயருட்பெருவாரிதியேமதுராபுரிக்குத்
துமையேயழகியசொக்கேதமிழ்தந்தசுந்தரமே. ௩௧

முக்கட்பராபராசொக்கப்பிரானெனுமுன்னவனே
தொக்கச்சிவந்தகயற்கண்ணிசந்நிதியுற்றுமிசச்
செக்கச்சிவந்தபொற்றாமரைப்பாதந்தெரிசனைக்கே
பக்கத்தடுத்தவர்சொர்க்கத்தினையெட்டிப்பார்ப்பவரோ. ௩௨

மட்டார்குழலங்கயற்கண்ணம்மையிம்மட்டென்றுசொகைக்
கெட்டாதெனத்துயரநின்பாற்சொல்லிபேசவிக்க
ஒட்டாரநீசெய்யலாகாதுபாருன்னடிமைதன்னை
நட்டாற்றிற்கைவிட்டிடாதேபழிவெகுநாளிற்குமே. ௩௩

விரித்தான்சடையைமகாமேருவாசுகிவில்லைவிட்டுச்
சிரித்தான்புரத்தையெரித்தான்பாகுருதேசிகன்முன்
உரித்தான்கரியையுடுத்தான்பகிரண்டத்துள்ளுலகும்
பரித்தான்மதுரைதரித்தான்சவுந்தரபாண்டியனே. ௩௪

மைக்காற்குழற்பெண்வடிவாளைத்தென்னவன்மாமகளை
அக்காளையோன்பங்கிலாத்தாளையாறங்கைபாணவளைத்
திக்கார்தொழுங்கயற்கண்ணாளையோர்தினஞ்சேவைசெய்தால்
எக்காலமுமவர்சொர்க்காதிபோகத்திருப்பவரோ. ௩௫

வண்டிட்டகூந்தலும்வாரிட்டகொங்கைவளைகளுங்கற்
கண்டிட்டசொல்லுங்கயற்கண்ணிபாகமுங்கைதொழுதேன்
தண்டிட்டடிக்குமறலிவந்தாற்சன்னையிட்டுநகைத்
துண்டிட்டுவாசிறுபிள்ளாயென்றாருக்கனுப்புவனே. ௩௬

பொன்னேபொருந்தற்புதமேபொலிந்தமென்பூந்திருவே
தென்னேசிறந்தசெந்தேனேதிருந்தருட்சின்மயமே
அன்னேயமுதேயருளேயமரர்க்கரும்பொருளே
மின்னேவியன்கூடாமதுராபுரிமீனம்மையே. ௩௭

தேட்டேதுமில்லைகொடுப்பாருமில்லைதிரத்துழவில்
பூட்டேருமில்லையிதெல்லாமெம்பாவிலைபூர்ணவரங்
கேட்டேனதற்குப்பிறிதில்லையேயினிக்கேட்கவுநான்
மாட்டேனுன்மேற்பழிபோட்டேன்மதுராமனோன்மணியே. ௩௮

உள்ளக்கவலையெலாம்விள்ளும்போதுமுனதுமனம்
எள்ளத்தனையிரங்காதிருந்தாயெளியேனினிமேல்
தள்ளப்புறத்தினிலென்றாலும்போவதுதானிலைப்பொன்
வள்ளத்தமுதன்னகிள்ளாய்கடம்பவனவல்லியே. ௩௯

எப்படியெப்படிச்சொன்னாலுநானிங்கேனெனவே
அப்படியப்படிநீயிருக்கின்றவதிசயத்தை
இப்படியிப்படியென்றாலுமெனக்கேதெரியச்
செப்படிசெப்படியம்மாமதுரைச்சிவானந்தியே. ௪௰

செப்பத்திலுன்னைத்தொழவாயிரங்கண்ணுஞ்செல்லும்பொல்லேன்
தப்பத்தவறத்தொழுகாலுஞ்சொக்கர்தடம்புயத்தாக்
கொப்பத்திரண்டகொங்கையுன்னவயவமொன்றுக்கொன்று
முப்பத்திரண்டுகண்வேண்டுங்கண்டாயென்முகத்தினுக்கே. ௪௧

அடியார்காத்துமதுரேசரோயும்மைத்துள்ளியசேற்
சொடியானடித்ததாங்குற்றமன்றேகிழக்கோதையிவள்
அடியாளென்றேசுட்டபிட்டையெல்லாமள்ளியள்ளித்தின்று
வடியாகதியிற்களைத்துவிட்டீரவள்வல்வினையே. ௪௨

காஞ்சொன்னங்கண்டகெந்நாளோதொடுத்தகவிக்கெவர்கள்
உராஞ்சொன்னதோவந்திருததிவ்வேளையுதவுனக்கே
பாஞ்சொன்னேனின்னம்பாமுகமேதிதுபத்துலட்சம்
தாஞ்சொன்னதாயெண்ணுவாய்சிவகாமசவுந்தரியே. ௪௩

ஒருபாதிமால்கொளமற்றொருபாதியுமையவள்கொண்
டிருபாதியானுமிறந்தான்புராரியிருநிதியோ
பெருவாரிதியிற்பிறைவானிற்சர்ப்பம்பிலத்திற்கற்ப
தருவானமேபோஜகொடையுன்கையேடைக்கைதந்தனனே. ௪௪

பாலனைப்பழித்தல்.

அரும்பாலகாமுனம்பூமணஞ்சொற்பொருளாகமுயிர்
சுரும்பாஞ்சுவையெள்ளுநெண்ணெயும்போலொத்தகாதலனைப்
பெரும்பாலினல்லன்னஞ்சாசலத்தைப்பிரிப்பதுபோல்
சுரும்பாம்புலவர்யமனாலேசெக்கெனத்தோன்றினையே. ௪௫

அரும்பாக்கியகொங்கைபாலாக்கியுழக்களப்பனெஞ்சை
இரும்பாக்கியென்னெஞ்சைப்பித்தளையாக்கியவ்வேந்திழையைக்
கரும்பாக்கியென்னையும்வேம்பாக்கியிவ்வண்ணங்கண்டனையே
பெரும்பாக்கியமல்லவோமகனேயுனைப்பெற்றதுவே. ௪௬

கலவிமேற்பிரிதல்.

விண்ணுக்குமாமதிகாயவெங்காமவெரிகொளுந்தப்
பண்ணுக்குமாமொழிமாதங்கமாம்பஞ்சபூதியம்போம்
கண்ணுக்குமூக்குச்செவியாக்கையற்றகடத்திலங்கம்
பெண்ணுக்குவார்தமைப்போலோதிவாரும்பிரியவரோ. ௪௭

உணர்வின்றியான்செய்தகுற்றமொன்றிலையுனைப்பிரிந்தால்
வனக்குன்றிலேறிவிழவறியேன்வண்மைசேர்மயிலே
எனக்கென்றுவட்டமிட்டண்ணாந்துவிம்மியிருக்குமுன்றன்
றனக்குன்றிலேறிவிழுவேனின்னல்குற்றடாகத்திலே. ௪௮

கண்ணார்புதிட்டநல்லாள்காட்டபோதிரண்டுகூட்டமலர்க்
கண்ணைக்கூட்டவிரண்டிருக்கக்கிர்க்கம்பிபோல்
கண்ணாநடுவிரற்சேதாமுலோபருக்கேதுகண்டாய்
கண்ணார்நுதலண்ணல்சேய்வணிசாசெந்தில்காந்தவனே. ௪௯

நிணம்போகத்தள்ளிப்பெருர்பூதம்போலப்பின்னேற்றுசெத்த
பிணம்போற்கிடக்குபுராணவர்காண்பிறர்ச்சிட்டிவைத்த
பணம்போனபின்புவிவேகமுண்டாகுமப்பஞ்சைகள்வந்
கணம்போதும்போதுங்கறுப்பாதென்மாவையிற்காவலனே. ௫௰

ஏவைக்குக்கூன்சிலைதொட்டானனங்கனிருவிசப்பில்
தீவைக்குந்திங்கட்குடையெடுத்தான்றென்றற்றேருகைத்தான்
காவைக்குங்கண்மணிகள்தூரியீன்றசறுப்பன்வளா
மாவைக்கும்பாவைக்கும்பூவைக்கும்போதுவடுவைக்குமே. ௫௧

பொன்னாகத்தார்பணிமாயோன்காங்கைதப்பொருப்பில்வரும்
மின்னாண்முகங்கண்டணஞ்சாயல்போற்பெறுவேண்டியன்றோ
வன்காட்கமலமலர்கடன்மேருவணியயிலும்
தன்னாலயவனிசங்கரன்வேலைத்தாங்கியதே. ௫௨

குண்டைக்கொருத்தனைக்கூத்தாடும்பித்தனைக்குண்டுணியைக்
கண்டக்கருப்பனைப்பிள்ளையைத்தின்னியைக்காணவயன்
மண்டைக்காத்தனைக்கண்ணைப்பனைச்சிலைவாரியுண்ட
பண்டைப்பறையனையோதேவனென்றுபகருவதே. ௫௩

அந்தங்கரும்பள்ளிபாசாங்குசத்திகண்ணம்படைச்சி
கைத்தவிடச்சிகுறத்திக்குமாமிகவில்வலைச்சி
சந்தீபுழுக்கச்சிபாம்பணையோனுக்குத்தங்கச்சியாம்
இந்தப்பாச்சியையோசிவகாமியென்றேத்துவதே.




நிலமேமுளந்தநெடுமால்பணியுநிமலர்போன்னம்
பலமேவுதில்லைப்பதிடாயர்பணிவளையில்
கலமேதிமிக்கலமேசங்கமேநற்கயலினமே
சலமேசலஞ்சலமேயென்றுநீருமென்சஞ்சலமே. ௫௫

பொரடக்கயப்பிடியென்றன்மதனுமிப்பூவையுமா
நாடக்கமுஞ்சற்றறிந்திலனேமலர்த்தாள்வணங்கா
மூரடக்கவுடக்கெடிமன்னர்வெற்றிமுடிபிடுங்குங்
கூடக்களிற்றண்ணலேவல்லமாநகர்க்காளத்தியே. ௫௬

கவிபாகுமாதினைப்பெற்றேன்புலவன்கற்றேனனையாம்
செவியாரக்கேட்டங்குணர்வான்சகோதரன்செந்தமிழ்க்கு
சுவியாவருமையறிவான்பதியவன்றானிலையேல்
புவியாகுமண்ணுக்குளெவ்பலமாமந்தப்பூங்கொடிக்கே. ௫௭

சோரதவேடன்செருப்பாலடிக்கவுந்தீண்டயுந்தன்
நீர்வாயுமிழவுமுச்சிட்டம்போடவுநீண்டசிலைத்
தாராலடிக்கவுங்கண்ணீர்ததும்பவுந்தாய்தமர்கள்
ஆராகிலுமில்லையோதிருக்காளத்தியப்பனுக்கே. ௫௮

ஒட்டாகவொட்டியுங்காற்பொன்னின்மாப்பொன்னுபாயமதாய்த்
தெட்டாதிரான்பணிசெய்யாதிரான்செம்பொன்மேருவினைக்
கட்டாகக்கட்டிக்கவிகளவாநிறைகாட்டவல்ல
தட்டானுங்கஞ்சியல்லோவணிந்தான்சிவன்சர்ப்பத்தையே. ௫௯

ஏராட்டும்பூந்தொங்கனமோகனைக்காரற்கினியசுதம்
பாராட்டநாணினியாளல்லவேபசுபெண்குழவி
தாராட்டவுஞ்சங்கிற்பால்பிள்ளைக்கூட்டித்தடவியஞ்சல்
நீராட்டமையிடப்போமோவெனக்குள்ளநேசமுமே. ௬௰

விருத்தம்.

மட்டாருந்தென்களந்தைப்படிக்காசனுரைத்ததமிழ்வரைந்தவேட்டைப்
பட்டாலேசூழ்ந்தாலுமுவுலகும்பரிமளிக்கும்பரிந்தவேட்டைத் (ல்
தொட்டாலுங்கைம்மணக்குஞ்சொன்னாலும்வாய்மணக்குந்துய்யசெ[illegible]றி
கட்டாலுந்தமிழ்ப்பயிராய்விளைந்திடுமேபாட்டினிடங்களிநந்தானே. ௬௧

வெண்பா.

ஆலெங்கேயங்கே யரும்பறவையாற்றுயிலும்
மாலெங்கேயங்கே மலர்மடந்தை-கோலஞ்சேர்
செங்கேதகைமணக்குஞ் செங்குன்றையூரனெங்கே
ஆங்கேயிரவலரெல் லாம். ௬௨

ஊணைக்கருடுமோ வுலகந்தனைக்கடுமோ
ஆணைக்கடுமோ வறியேனை-க்கமோ

பொருப்புவட்டமான முலைப் பூவையரேயிந்த
நெருப்புவட்டமான நிலா. ௬௩

நற்றோரணவீதி நண்ணூர்வல்லைக்காளத்தி
சற்றோர்தமக்களிக்கும் கையேகை-மற்றோர்கை
வேங்கையலகைமுகை வேட்கைபலகைநகை
காங்கையழுகை விழுகை. ௬௪

போசனேபோர்புலவப் பூமுழுதும்பொன்மாரி
வீசுவாயன்சதிலோர் விந்தேனும்-பேசுமென்மேல்
பட்டதில்லையென்வறுமை பாரக்குடையாய்
முட்டக்கவிந்திடுத லால். ௬௫

காலையரவிந்தக் கழுநீருடன்கலந்தால்
மாலையரவிந்த மயக்காதோ-பாலைப்
பழிக்கின்றமென்முலையீர் பாண்டியனூருணா
அழிக்கின்றதென்னோ வது. ௬௬

பாண்டியனூர்-கூடல்-அது-புணர்ச்சி.
ஆகசெய்யுள்-௫௬.

## பொய்யாமொழிப்புலவர்.

வாய்த்தவயிரபுர மாகாளியம்மையே
ஆய்த்தமணலி லணிவரையிற்-காய்த்த
கதிரைமாளத்தின்னுங் காளிங்கனேறுங்
குதிரைமாளக்கொண்டு போ. (௧)

இவருபாத்தியாயர்.

பொதியிலகத்தியனைப் பொய்யாமொழியாய்ச்
சிதைவில்புலவர் சிகாமணியாய்த்-துதிசேருஞ்
செங்காட்டங்கோட்டத் துறையூரனுந்தலத்தில்
தங்காட்டங்கொண்டிருப்பாய் தான். ௨

அகவல்.

வாழிசோழவென் வாய்மொழிகேண்மோ
ஊழிநிலவெறி மாளிகையின்வயிற்
கட்டிளங்கணவன் கவின்பெறுசேக்கை
என்றறியமனவி நெடுந்துயில்கொளச்

செல்லாக்கிடமி னெனக்கிடந்தருகெனச்
சொல்லியநண்பன் றனிச்செல்பவனே
நானுமேகுவ னற்றுணையவர்க்கே. ௩

வெண்பா

அன்றுநீசெல்லக் கிடவென்றாய் பிழைபோ
யின்றுநீவானுலக மேறினாய் - மன்றல்கமழ்
மானேக்கும்வேல்விழியார் மாமனே கண்டியூர்
சீனக்காசெல்லக் கிட. ௪

பூவேந்தர்முன்போற் புரப்பாரிலையெனினும்
பாவேந்தருண்டென்னும் பான்மையால் - கோவேந்தன்
மாறனறிய மதுராபுரித்தமிழோர்
வீறணையேசற்றே மிகு. ௫

உங்களிலேயாவொருவ னெவ்வுவனோவொவ்வேனோ
இங்கட்குலனறியச் செப்புங்கள் - சங்கத்தீர்
பாடுகின்றமுத்தமிழ்க்கென் பைந்தமிழுமொக்குமோ
ஏடெழுதாரோவெழுவி ரின்று. ௬

பொன்போலுங்கள்ளிப் பொறிபறக்குங்கானிலே
என்பேதைசெல்லற் கியைந்தனளே - மின்போலும்
மானவேன்முட்டைக்கு மாறாயதெவ்வர்போங்
கானவேன்முட்டைக்குங் காடு. ௭

முருகக்கடவுள்.

விழுந்ததுளியந்தரத்தே வேமென்றுவீழின்
எழுந்துசுடர்சுடுமென் றேங்கிச் - செழுங்கொண்டல்
பொய்யாதகானகத்திற் பெய்வளையுஞ்சென்றனளே
பொய்யாமொழிப்பகைஞர் போல், ௮

ஔவையார்.

ஐம்பொருளுநாற்பொருளு முப்பொருளும்பெய்தமைத்த
செம்பொருளேயெம்மறைக்குஞ் சேட்பொருளாத் - தண்குருகூர்ச்
சேய்மொழியதென்பர் சிலரியானிவ்வுலகில்
தாய்மொழியதென்பேன் றகைந்து. ௯

சேய்மொழியோதாய்மொழியோ செப்பிலிரண்டுமொன்றே
வாய்மொழியையாரு மறையென்பர் - வாய்மொழிபோல்
ஆய்மொழிகள்சால வுளவெனினுமம்மொழியுஞ்
சாய்மொழியாவென்பேன் றகைந்து. ௰

மதுரைச்சொக்கநாதர்.

கொங்குதேர்வாழ்க்கையஞ்சிறைத்தும்பி
காமஞ்செப்பாதுகண்டதுமொழிமோ
பயிலியதுகெழீஇயநட்பின்
மயிலியற்
செறியெயிற்றரிவைகூந்தலின்
நறியவுமுளவோநீயறியும்பூவே ௰௧

அகவல்.

மதிமலிபுரிசைமாடக்கூடற்
பதிமிசைநிலவும்பாணிறவரிச்சிற
கன்னம்பயில்பொழிலாலவாயின்
மன்னியசிவன்யான்மொழிந்திடுமாற்றம்
பருவக்கொண்மூப்படியெனப்பாவலர்க்
கொருமையினுரிமையினுதவியொளிதிகழ்
குருமாமணிதிகழ்குலவியகுடைக்கீழ்ச்
செருமாவுகைக்குஞ்சேரலன்காண்க
பண்பால்யாழ்பயில்பாணபத்திரன்
றன்போலென்பாலன்பன்றன்பால்
காண்பதுகருதிப்போந்தனன்
மாண்பொருள்கொடுத்துவரவிடுப்பதுவே. ௰௨

அங்கம்வளர்க்கவரிவாளிதனைத்தடவிப்
பங்கப்படவிரண்டுகால்பரப்பிச்-சங்கதனைக்
கீர்கீரெனவறுக்குங்கீரனோவென்கவியைப்
பாரிற்பழுதென்பவன். ௰௩

நக்கீரர்.

சங்கறுப்பதெங்கள்குலஞ் சங்கரர்க்கங்கேதுகுலம்
பங்கமுறச்சொன்னாற் பழுதாமோ-சங்கை
அரிந்துண்டுவாழ்வோ மரனாரைப்போல
இரந்துண்டுவாழோ மினி. ௰௪

திருஞானசம்பந்தமூர்த்தி.

கடியுண்டநெடுவாளைகாவிற்றப்பிக்
கயத்துக்குளடங்காமல்விசும்பிற்பாய
அடியுண்டவுயர்தெங்கின்பழத்தாற்பூசும்
அலையுண்டுகுலைசிதறுமாவினாடா

படியுண்டபெருமாளைப்பரிந்துபாடிப்
பதம்பெற்றபெருமானே கவியேன்பெற்ற
கொடியொன்றுநின்பவனிக்கெதிரேசென்று
கும்பிட்டாளுயிரொன்றுங்கொடுவந்தானே. ௰௫

திருமங்கையாழ்வார்.

வருக்கைகனிசிதறிச்செந்தேன்பொங்கி
மடுக்கரையிற்குளக்கரையின்மருதிலோடப்
பெருக்கெடுத்துவண்டோலஞ்செய்யுங்காழிப்
பிள்ளையார்சம்பந்தப்பெருமாள்கேளீர்
அருட்குலவுமயிலைதனிலனலால்வெந்த
அங்கத்தைப்பூம்பாவையாக்கினேமென்
றிருக்குமதுதகவன்றுநிலவால்வெந்த
இவளையுமோர்பெண்ணாக்கலியல்புதானே. ௰௬

சேமங்குருகையோ செய்யதிருப்பாற்கடலோ
நாமம்பராங்குசனோ நாரணனோ - தாமம்
துளவோவகுளமோ தோளிரண்டோநான்கோ
உளவோபெருமானுனக்கு. ௰௭

சங்கத்தார் அகவல்.

காலைஞாயிறு கடுங்கதிர்பரப்பி
வேலையுங்குளனும் வெடிபடச்சுவறித்
தந்தைதாய்மக்கண் முகம்பாராமல்
வெந்தசாகமும் வெவ்வேறருந்திக்
குணமுடனுருங் கொடுத்துறவாண்ட
கணவனைமகளிர் கண்பாராமற்
பழுத்தவுடலம் பசையறவற்றி
விழித்தவிழியெலாம் வேற்றதுவிழியா. ௰௮

அறவுரையன்றி மறவுரைபெருகி
உறவறமொழிந்த வூழிகாலத்தில்
தாயிலார்க்குத் தாயேயாகியும்
தந்தையிலார்க்குத் தந்தையேயாகியும்
இந்தமாநிலத் திடுக்கண்டீர
வந்துதோன்றிய மாநிதிக்கிழவன்
சீலஞ்சேரி னெடுமாலானன்
ஆலஞ்செறியி னூன்றசடையன்

பிறந்தும்பிறர் கேடுநினையான்
பிறர்பொருள் வவ்வான்
மறந்தும்போகான் வாய்மையுங்குன்றான்
இறந்துபோகா தெம்மையுங்காத்தான்
வருந்தல்வேண்டாம் வழுதி
இருந்தனையிருந்தன யிடர்கெடுத்தனனே. ௰௯

திருமழிசையார்.

கணிகண்ணன்போகின்றான் காமருபூங்கச்சி
மணிவண்ணாநீயிங் கிராதே-துணிவுடனே
செந்நாப்புலவன்யான் செல்கின்றேனீயுமுன்றன்
பைந்நாகப்பாய்சுருட்டிக் கொள். ௨௰

ஆகசெய்யுள்-௫௫௧.

---

## சொக்கநாதப்புலவர்.

விருத்தம்.

சீர்கறுத்தமுகிற்கரத்தான்கஸ்தூரிபூபனருள்சேயாவென்று
மோர்கறுப்புமில்லாததொண்டவளநாட்டிருக்குமுசிதவேளே
ஆர்கறுப்பனென்றுசொல்லியழைத்தாலுநாமுன்னையன்பினாலே
பேர்கறுப்பனிறஞ்சிவப்பன்கீர்த்தியினால்வெளுப்பனெனப்பேசுவாமே.

பிள்ளைவயதினிற்கல்விகற்றோம்பின்பு
பெரியநரவாகனமும்பெற்றோம்பூமி
உள்ளளவுங்கீர்த்திநிலைநிறுத்திக்கொண்டோம்
ஒருகுறையுமில்லையினியுரைப்பக்கேண்மோ
தெள்ளிலகுசிதம்பரத்தைத்தெரிசித்தோம்பின்
சேற்கருங்கட்டளவநகத்தெய்வயானை
வள்ளிபுணர்சிவப்பனையுந்துதித்தோமெங்கள்
மாவலவனர்கறுப்பனுன்னைவாழ்த்தினோமே. ௨

நல்லப்பனம்மையப்பன்றருதிருவேங்கடராமனெழிற்சீராமன், வல்
லக்கொண்டமனுடனே பாதைவெங்கடேசனைப்போல் வரிசைதந்தான்;

செல்லத்தம்பிரநடேசனமானவையில்வாழ் கறுப்பண்ணன்றெருவிதிக்கே,
பல்லக்குத்தான்சுமந்தானதுமட்டோவாயிரம்பொன்பரிசுதானே. ௩

மெய்யிலேயொருபாதியுமைக்களித்தசெங்காட்டுவிமலனாரே
மையிலேதோய்ந்தவிழிச்சந்தனமான்றலைச்சறியவளமாயாவி [று
நெய்யிலேதான்சமைத்துக்கொடுத்திருந்தும்படைத்திருந்தீர்தாளின்
கையிலேமழுவெடுத்தாற்பொய்யாமோபிள்ளைகொன்றதளவுதானே. ௪

துப்பனையுமரகதத்தின்கொழுந்தனையுமொன்றாகக்கலந்தமெய்யா
செப்பரியபுலியதளைத்தரிக்குமுத்தாபதியிற்சிவனேநீதான்
அப்பனையும்விழுங்கியொருபிள்ளையுந்தின்றாற்றாமலேயோவின்னுங்
கப்பனையுங்கையுமாய்ப்புறப்பட்டாய்நல்லதிருக்காட்சிதானே. ௫

அடிபட்டீர்கல்லாலுமெறிபட்டீரத்தனைக்குமாளாயந்தப்
படிபட்டும்போதாமலுதைப்பட்டீரிப்படியும்படுவாருண்டோ
முடிபட்டசடையுடையீர்கழுக்குன்றீர்முதற்கோணன்முட்டக்கோண
விடிபட்டுப்பொறுத்திருந்தீர்சிவசிவாவுமைத்தெய்வமென்னலாமோ. ௬

செல்லாரும்பொழில்புடைசூழ்புலியூரம்பலவாணதேவாவும்மைக்
கல்லாலும்வில்லாலுஞ்செருப்பாலும்பிரம்பாலுங்கடிந்துசாடும்
எல்லாருநல்லவரென்றெண்ணியருளீந்ததென்னவிகழ்ச்சியென்றுந்
சொல்லாமன்மலரால்விட்டெறிந்தவனைக்காய்ந்ததென்னசொல்லுவீரே.

நல்லானையிடமருவுந்தியாகையாவுமதிடத்தினியாயங்காணோம், கல்லாலேயெறிந்தோர்க்குஞ்செருப்படியாலுதைத்தோர்க்குங்கடிந்துபோரில், வில்லாலேயடித்தோர்க்குங்கொடுத்தீரேயல்லாமல்விழிநீர்சோர, எல்லாமுன்செயலென்றேயிருப்போருக்கியாதேனுமீந்திலீரே. ௮

பண்காணுந்தமிழ்ப்புலவரினத்தோடேயிணஞ்சேரும்பரிசேபோலத், தண்காவிமலர்த்தடஞ்சூழ்காவிரிநாட்டொருபுதுமைசாற்றக்கேளீர், கண்காணநாயான்மேல்வெண்காடைவீற்றிருக்கக்கண்டோமந்த, வெண்காடையிடப்புறத்தேபச்சையன்னங்கலந்திருக்கும்விதங்கண்டோமே. ௯

இந்திரன்கலையாமென்மருங்கிருந்தானைக்கிளியுநாம்விட்டகலான், எமனெனைக்கருதானானெனக்கருதிநிருதிவர்த்தென்னையென்செய்தான், அந்தமாம்வருணனிருகண்விட்டகலானகத்தினின்மக்கணூறாயானும், அநிலமதாகுமமுதினைக்கொள்வோம்யாரெதிரெமக்குளாருமில், சந்ததமித்தல

